# வேலூர் கம்பன் கழகம்

# விழா மலர்





இருபத்தொன்பதாம் ஆண்டு-2005

# கடவுள் வாழ்த்து

**உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்**
**நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா**
**அலகிலா விளையாட்டுடையார் - அவர்**
**தலைவர்; அனைவர்க்கே சரண் நாங்களே**

கலியாண்டு 3986 : சகாப்தம் 807 : விசுவாவசு பங்குனி 4 ஆம் தேதி (கி.பி. 886, பிப்ரவரி) புதன்கிழமை : துவிதியை திதி, அத்த நட்சத்திரம் கூடிய நன்னாளில் வெண்ணெய் நல்லூரில், இராமாவதாரத்தை அரங்கேற்றிக் கம்பன் கவிச் சக்கரவர்த்தி ஆனான்.

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப்படும்**

அறம் வெல்லும் - பாவம் தோற்கும் என்கிற பேருண்மையை - தத்துவத்தை, நிலைநிறுத்தி மக்கள் மனத்தில் பதிய வைக்கவும்,

சமய சமரசத்தை உருவாக்கவும், நிலை நிறுத்தவும்,
சமதர்ம சமுதாய அமைப்பு மலர்ந்திடவும்

தெய்வமாக்கவி வள்ளுவரின் வாழ்வியல் இலக்கணமான திருக்குறளுக்கு ஓர் இலக்கியம் படைத்திடவும் கம்பன் தம் படைப்பினை உலகுக்கு வழங்கினான்.

# கம்பன் அடிப்பொடி அருளிய கம்பன் மலர் வணக்கம்

உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே !

திருவழுந்தூர் வரு தேவே போற்றி !
அருள் வழி உணர்த்துவோர் அந்தண போற்றி !
தமிழ்தவம் செய்த மாதவமே போற்றி !
அமிழ்தினும் இனிய சொல் அருளினை போற்றி !
உலகமா கவி என ஒளிர்வாய் போற்றி !
கலைகளின் பெருங்கடல் கடந்தாய் போற்றி !
பொன்னித் துறைதவழ் புனித போற்றி !
கன்னித் தமிழ்த்திறம் காட்டினை போற்றி !
முத்தமிழ்த் துறையின் வித்தக போற்றி !
சித்தம் அழகிய சேவக போற்றி ! 10

இதிகாசத் துறை ஏறே போற்றி !
விதி வலி உணர்த்தும் மதிவல போற்றி !
சாத்திரம் நன்குணர் சதுரனே போற்றி !
பாத்திரம் சுவைசெயும் பாவல போற்றி !
புவிமுழு தளந்த புலவனே போற்றி !
கவிஞரில் ஓங்கிய கலைஞனே போற்றி !
மாயாப் புகழொடு வாழ்வாய் போற்றி !
தாயாய் அறத்தைத் தாங்குவாய் போற்றி !
பெண்மைக்குயர்வு பேணுவாய் போற்றி !
உண்மைக் குருவம் உதவினை போற்றி ! 20

நடையில் நின்றுயர் நாயக போற்றி !
சடையின் புகழ்விரி தலைவ போற்றி !
இறைஉயிர் முறைஅறி எம்மான் போற்றி !
பொறைசயத் துறைஎனும் புனித போற்றி !
கற்பனைத் திறம்பல கவித்தனை போற்றி !
அற்புதம் படைக்கும் அரசே போற்றி !
காவிய வானக் கதிரவ போற்றி !
ஓவியக் கவிதைக் கொருவனே போற்றி !
விருத்தக கவிக்கொரு வேந்தே போற்றி !
கருத்துப் புரட்சிக் கவிஞனே போற்றி ! 30

என்றுமுள தென்தமிழ் இயம்பினை போற்றி !
தென்றலைப் புலியாய்ச் செய்வாய் போற்றி !
இராமாவதாரம் ஈந்தாய் போற்றி !
பராவரும் காவியம் படைத்தாய் போற்றி !
வான்மிக மணிக்கொளி வழங்கினாய் போற்றி !

கோன்மை நெறி உணர் கொற்றவ போற்றி !
வெண்ணெய் வளர்த்த விளக்கே போற்றி !
மண்ணில் வாழ்ந்த வரலவை போற்றி !
அலகிலா விளையாட்டறிவே போற்றி !
உலகெலாம் போற்றும் உத்தம போற்றி ! 40

பெருமையே வடிவாய் பிறங்குவாய் போற்றி !
அருமையைச் சொல்லில் அமைத்தாய் போற்றி !
பலகலை ஆர்ந்த பனி மதி போற்றி !
உலகம் பொது என உரைத்தனை போற்றி !
அனைத்துயர் காப்பியம் ஆக்கினை போற்றி !
மனத்துலகம் நன்குணர் மன்னவா போற்றி !
மாயா சனகனை வடித்தனை போற்றி !
தோயாத் துறையிலாத் தோன்றலே போற்றி !
தத்துவநிலை தெரி சத்துவ போற்றி !
சித்திரம் எனக் கவி தீட்டினை போற்றி ! 50

வள்ளுவன் நெறிசெலும் வள்ளலே போற்றி !
ஒள்ளிய துணர்ந்த நல்உணர்வோய் போற்றி !
காவிரி நலமுணர் காதல போற்றி !
பாவிகம் முழுதுணர் பருணித போற்றி !
மெய்ப்பாடு ணர்ந்திடும் விபுதா போற்றி !
துய்ப்பார்க் கினித்தடும் சொல்வல போற்றி !
பவித்திரப் பெருங்கதை பகர்ந்தாய் போற்றி !
செவிக்குறு தேன் மொழி செம்மலர் போற்றி !
மக்களுக் குரிமை வரித்தனை போற்றி !
தக்கநற் கவிதைத் தச்சனே போற்றி ! 60

நுண்கலை உணர்ந்திடும் நூலோய் போற்றி !
வண்கவிச் சக்கரவர்த்தியே போற்றி !
கல்வியிற் பெரிய கடலே போற்றி !
செல்நெறி காட்டும் தேசிக போற்றி !
அமரகாவிய அமுதே போற்றி !
சமரம் காட்டலில் சமனிலி போற்றி !
செந்தமிழ்க் குயர்வருள் செம்மலே போற்றி !
அந்தமில் சுவைபொழி அண்ணால் போற்றி !
உலகுடன் பிறப்பென உணர்த்தினை போற்றி !
விலகலாப் பொருளுரை மேலவ போற்றி ! 70

வேதாந்தப் பொருள் விரித்தனை போற்றி !
நாதாந்தத் துறை நாவல போற்றி !
அழுக்கறு நெறிதரும் அறவோய் போற்றி !
ஒழுக்கம் பேணிடும் ஒண்தவ போற்றி !
கற்பு நெறிக்கொரு காவல போற்றி !

சொற் பொருள் கணித்த தூயோய் போற்றி !
திருக்குறள் விரிவுரை செய்தவ போற்றி !
மருட்கொண நெறிவளர் மாண்பினை போற்றி !
துன்பிலே சுகமெனச் சொல்லினை போற்றி !
அன்பதே ஆக்கம் என்றறைந்தனை போற்றி ! 80

கவியிறுக் கனிஎனும் கண்ணே போற்றி !
செவிநுகர் கனியருள் சிற்குண போற்றி !
படைக்கலப் பரிசுணர் பண்பனே போற்றி !
அடைக்கலம் காக்குறல் அருள்வோய் போற்றி !
ஆன்றவிந்தடங்கிய ஐயா போற்றி !
சான்றவர் இனத்தொரு தக்கோய் போற்றி !
அம்பிகாபதி தரும் அத்தா போற்றி !
கும்பிட்டு வாழ்கிலாக் குலபதி போற்றி !
அந்தியைக் காலனாய் ஆக்குவாய் போற்றி !
சந்தமார் சுவைவளம் தந்தனை போற்றி ! 90

நாடக அணிக்கொரு நாயகனே போற்றி !
வீடுறு நெறியதும் விளக்கினை போற்றி !
மறைபொருள் விளக்கிடும் மாதவ போற்றி !
பிறப்பெலாம் சமமெனப் பேசுவாய் போற்றி !
தமிழ்ப் பண்பாட்டின் தாயே போற்றி !
நிமிர் கடன் உணர்த்தும் நெறிவல போற்றி !
யாரொடும் பகை கொளேல் என்ற போற்றி !
போரொடுங் கிடவழி புகன்றவ போற்றி !
மக்களை உயிர்என வகுத்தனை போற்றி !
மன்னனை உடலென மாற்றினை போற்றி ! 100

அறிவினுக் கறிவினை அறிபவ போற்றி !
செறிபெரும் கேள்விச் செல்வனே போற்றி !
சமய நோக்கினில் சமரச போற்றி !
குமரித் தமிழ்க்கொரு கோவே போற்றி !
மானிடப் பெருமை வளர்த்தனை போற்றி !
தேனிசைத் தமிழின் தெய்வமே போற்றி !
நாட்டரசன் கோட்டை நயந்தாய் போற்றி !
போற்றி கம்பனே போற்றி போற்றி ! 108

உன்னை உள்ளபடி அறியேம்
உலகை உள்ள திறமுள்ளேம்
பின்னை அறியேம், முன்னறியேம்
இடையும் அறியேம் ; பிறழாமல்
நின்னை வணங்கி நீ வகுத்த
நெறியில் நிற்கும் அது அல்லால்
என்னை அடியேம் செயற்பால ?
இன்பம் துன்பம் இல்லானே !

# பொருளடக்கம்

I. *முகப்பு*

1. கடவுள் வாழ்த்து 2
2. கம்பன் மலர் வணக்கம் 3 - 5
3. பொருளடக்கம் 6
4. வேலூர் கம்பன் தோற்றம் - செயல்பாடு 7,8
5. வேலூர் கம்பன் கழகத்தின் நிறுவனர் 9,10
6. நெடிதே வாழ்த்துவோம் 11

II. *கட்டுரைகள்*

1. கம்பன் கேட்ட வரம் - பேரா. சேதுபதி, திருச்சி 12-18
2. பெரியவாச்சான்பிள்ளை தொகுத்தருளிய திவ்ய பிரபந்த பாசுர ராமாயணம் 19-23
3. கம்பன் கவித்துவம் - பாவலர்மணி 'சித்தன்' 24-28
4. இராமாயணத்தில் இராமாயண உவமைகள் - முனைவர். தெ. ஞானசுந்தரம் 29-32
5. பாதுகைளை பூசிக்கும் இலங்கை பரதன் 33-34
6. 2005-ம் ஆண்டு வேலூர் கம்பன் விழாவில் காவியக்கவிஞர் 'வாலி' நிகழ்த்திய கவியரங்க முன்னுரைக் கவிதை 35-48
7. சர்வதேச கல்விக்கு வி.ஐ.டி.. க்கு வாங்க 49-51

III. *விளம்பரங்கள்*

IV. *வேலூர் கம்பன் கழக நிர்வாகிகள்*

*வேலூர் கம்பன் கழக காப்பாளர்கள்*

*கம்பன் விழா வரவேற்புக்குழு*

*ஓர் பணிவான வேண்டுகோள்*

# வேலூர் கம்பன் கழகம்

## தோற்றம் - செயல்பாடு

காந்திய நெறியாளர், கம்பன் பேரறிஞர், அமரர் காரைக்குடி. சா. கணேசன், கம்பன் அடிப்பொடி ஐயா அவர்கள் 1938-ல் முதன் முதலில் கம்பர் கழகத்தை காரைக்குடியில் தோற்றுவித்தார். அஃது ஆல்போல் தழைத்து அறுகு போல வேரோடி, தமிழகத்தில் ஐம்பதுக்கும்மேற்பட்ட இடங்களிலும், புதுவை மாநிலத்திலும், மலேசியாவிலும், இலங்கையிலும், பிரான்சிலும், சுவிட்சர்லாந்திலும் கம்பர் கழகங்களைத் தோற்றுவித்தது.

காரைக்குடியில் இவ்வாண்டு 66ம் கம்பன் திருநாள் விழா நடந்தேறியது. அடியேன் இந்து அறுபத்து ஆறு ஆண்டுகளில் நாற்பது ஆண்டுகட்கு மேல் சென்று கலந்து கொண்டுள்ளேன். காரைக்குடியில் மட்டுமன்றி தமிழகத்தில் கம்பன் விழாக்கள் நடைபெறும் அனைத்து ஊர்களுக்கும் சென்று ஆங்காங்கே நடைபெறும் கம்பன் விழாக்களிலே கலந்து கொள்வேன். இலங்கையில் கொழும்பு நகருக்கும் ஏழு ஆண்டுகளாகச் சென்று விழாக்களிலே கலந்து கொண்டுள்ளேன். அந்த வகையில் இவ்வாண்டு வரையில் அடியேன் 1502 நாட்கள் கம்பன் விழாவில் அனைத்து ஊர்களிலும் முழுநாட்களும் தங்கியிருந்து கம்பன் புகழ்பருகி, கம்பராமாயணத்தைக் கேட்டு, ரசித்து மகிழ்ந்து வந்துள்ளேன்.

சென்னையிலே 1976 ஆம் ஆண்டு, கம்பன் கழகம் துவங்கியபோது, அமரர் கம்பன் அடிப்பொடி அண்ணார் அவர்கள் உடனே வேலூரிலும் கம்பன் கழகத்தைத் துவக்கி நடத்தி வரும்படிப் பணித்தார்கள். அவரது விருப்பத்தைச் சிரமேற்கொண்டு வேலூரிலே கம்பன் கழகத்தைத் துவக்கினேன். அடுத்த ஆண்டில் வேலூர் ஸ்ரீ வெங்கடேஸ்வரா உயர் நிலைப்பள்ளி திறந்த வெளி அரங்கில் பந்தல் போட்டு 1977 ஆம் ஆண்டு செப்டம்பர் 4 ஆம் நாள் (4.9.1977) வேலூர் கம்பன் கழகம் திருமிகு கிருபானந்தவாரி சுவாமிகளால் அமரர் கம்பன் அடிப்பொடி அவர்கள் தலைமையில் புலவர் திலகம் புலவர் கீரன் அவர்கள் முன்னிலையில் துவக்கி வைக்கப்பட்டது. அதற்கு அடுத்த ஆண்டில் இருந்து ஆகஸ்ட் திங்கள் மூன்றாம் வாரம் வெள்ளி, சனி, ஞாயிறு கிழமைகளில் சென்னை கம்பன் விழாநடைபெற்று வருவதையடுத்து வேலூரில் நடைபெறத் திட்டமிட்டு அதன்படி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

குறிப்பிடவாறே முடிவு எடுத்ததை மாற்றாமல் ஆண்டு தோறும் ஆகஸ்ட் திங்கள் தோறும் மூன்றாம் வெள்ளி, சனி, ஞாயிறு, கிழமைகளில் வேலூர் கம்பன் விழா தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இடையில் மூன்று ஆண்டுகளில் மேல் குறிப்பிட்ட நாட்களில் எனது குடும்பத்தில் எனது குமாரர்கள், தங்கை, இல்லத்து சுப விசேடங்கள் இடை அமைய, அடியேன் அவைகளில் கூடச் சென்று கலந்து கொள்ளாமல் கம்பன் விழாவினை நடத்துவதற்காக அவைகளை ஒரு புறம் ஒதுக்கிவிட்டுக் கம்பனுக்காகத் தொண்டு செய்திட கம்பன் விழாக்களை முன் நின்று நடத்தியுள்ளேன் என்கிற எனது ஈடுபாட்டினை எனது பித்தினையும் பணிவன்புடன் குறிப்பிடுகிறேன்.

ஆண்டுதோறும் நற்றமிழ் நாவலர்கள், முத்தமிழ் வித்தகர்கள், அறிஞர்பெருமக்கள், பங்குபெற நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வேலூர் கம்பன் விழா மிக விரிவான முறையில் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இன்றைய பேச்சாளர் பெருமக்கள் அனைவரும் வேலூர் விழாவிலே வந்து கலந்து கொண்டு கம்பன் சுவையை வழங்கிய பெருமை இக்கம்பன் கழகத்திற்கு உண்டு.

வேலூர் கம்பன் விழாவில் புதுவை மாநில முன்னாள் முதல்வர்கள் மூவர், புதவை மாநில அமைச்சர், பல்கலைக்கழகத் துணை வேந்தர்கள், தலை சிறந்த ஆன்மிகச் செல்வர்கள், உயர்நீதி மன்ற நீதிபதிகள் நால்வர் மாவட்ட ஆட்சியாளர்கள் ஐவர், வணக்கத்திற்குரிய பிரமுகர்கள் பலர் பங்கு கொண்டு சிறப்பித்துள்ளனர்.

வேலூர் கம்பன் விழா முதல் பதினைந்து ஆண்டுகளாக ஸ்ரீ வெங்கடேஸ்வரா உயர்நிலைப் பள்ளி திறந்த வெளி அரங்கில் நடத்தியதை அடுத்து வேலூர் ஊரீஸ் கல்லூரி காப் அரங்கில் நடைபெற்று வருகிறது.

மூன்று நாட்களாக நடைபெறும் கம்பன் விழாவில் கம்பன் காப்பியம் முழுவதுமாகவே கேட்டு, ரசித்து மகிழ்ந்து பயனுறத் தக்க வகையில் சிறந்த தலைப்புகளில் நிகழ்ச்சிகள் கருத்தரங்கம், வழக்காடு மன்றம், பட்டி மண்டபம், விவாத மேடை, இசையரங்கம் மேல் முறையீட்டு மன்றம் தனியுரைகள் ஆய்வுரைகள் நாடகக்

காட்சிகள் எனப் பல தரப்பட்ட இலக்கிய நுகர் வகைகளில் அமைக்கப்பட்டு வருகின்றன.

வேலூர் கம்பன் விழாவினை ஆண்டு தோறும் நடத்துவது மட்டுமன்றி கம்பன் பெருமையை யாவரும் உணரவும் கம்பராமாயணத்தின் தனிச்சிறப்பை யாவரும் நன்கு அறியவும் கம்பராமாயணத் தொடர் சொற்பொழிவு திருமுருக கிருபானந்தவாரியர் சுவாமிகளைக் கொண்டு பதினைந்து நாட்கள் ஒரு முறையும் புலவர் திலகம், புலவர் கீரன் அவர்களை கொண்டு இரண்டு முறை பதினைந்து, பதினைந்து நாட்கள் தொடர் சொற்பொழிவு ஏற்பாடு செய்யப்பட்டது. வேலூர் சுற்றுப் புறத்தில் சத்துவாச்சாரியில் குடியேற்றம் புலவர் சீனி சம்பத் அவர்களைக் கொண்டும் காட்பாடி செங்குட்டையில் திரு. K. குணபூஷணம் அவர்களைக் கொண்டு, காந்தி நகரில் திரு குணபூஷணம் அவர்களைக் கொண்டும் கம்பராமாயணத் தொடர் சொற்பொழிவுகள் ஏற்பாடு செய்யப்பட்டன.

1990 ம் ஆண்டு முதல் வேலூர் கம்பன் கழகம் கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்த்து கம்பன் தொண்டு புரியும் அன்பர்களுக்கு "கம்பர் சீர் பரவுவார்" விருது ஆண்டு தோறும் வழங்கி சிறப்பு செய்யப்பட்டு வருகிறது. அந்த வகையில் நாற்பதுக்கும் மேற்பட்ட சான்றோர்களுக்கு கம்பர் சீர் பரவுவார் விருது வழங்கி கௌரவிக்கப்பட்டுள்ளது.

கம்பன் விழாக்களிலே கம்பனைப் பற்றிய நூல்களை வெளியிட்டும் சிறப்பு செய்து வருகிறோம் வேலூர் கம்பன் கழகத்தோடு தொடர்புடைய சான்றோர்பெருமக்கள் கம்பன் கழகத்திற்கு உதவிய நல்ல உள்ளம் படைத்தவர்கள் பெயரில் கம்பன் விழா நடைபெறும் அரங்கிற்கு அவர்கள் பெயர் சூட்டி கௌரவித்து உள்ளோம். அமரர்கள் ஆகி விட்ட அன்பர்கள் படங்களையும் திறந்து வைத்துக் கௌரவித்துள்ளோம்.

நம்மிடையே வாழும் தமிழகத்தின் சிறந்த கவிஞர் கவிக்கோ அப்துல் ரகுமான் அவர்களின் மணி விழாவில் பங்கு கொண்டு ரூபாய் ஐயாயிரம் நன்கொடை வழங்கிக் கௌரவித்துள்ளோம்.

ஆரம்பகாலம் முதல் பதினைந்து ஆண்டுகளுக்கு மேல் உடன் இருந்து பக்கபலமாக செயலாற்றிய திரு. K.N. இராமச்சந்திரன், கழகச் செயலாளர் அவர்கள் அமரராகியதும் அவரை கௌரவிக்கும் வகையில் அவரது குடும்பத்தாருக்கும் ரூபாய் பத்தாயிரம் அன்பளிப்பாக வழங்கிச் சிறப்பித்தோம்.

சீர்மிகு வாரியார் சுவாமிகளால் பாராட்டுப் பெற்ற, நமது நகர சமய சொற்பொழிவாளர் T.V. வானொலி புகழ் அமரர் K. குணபூஷணம் அவர்களை அவரது மறைவுக்கு முன்னர் வேலூர் கம்பன் விழாவில் சிறப்பு செய்து. பாராட்டி கௌரவித்து ஆடைகள் வழங்கி நன்கொடை அன்பளிப்பையும் வழங்கினோம்.

ஒவ்வொரு ஆண்டும் கம்பன் விழாவினைத் துவக்குவதற்கு முன் அருள்மிகு இரத்தினகிரி பாலமுருகன் திருக்கோவிலில் அபிஷேகம் செய்வித்து கம்பன் விழாப் பணிகளை ஜுலை முதல் தேதியில் துவக்கி வரும் முறைமையினை ஏற்படுத்திக் கொண்டு செயல்படுகிறோம். காரைக்குடி கம்பன் திருநாள் கம்பன் அருட் கோவிலில் வழிபட்டு விழா நிகழ்ச்சிகளுக்கு வடிவமைத்து அருள்திரு பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகரை வழிபட்டு கம்பன் விழா வேலைகளை மேற்கொள்ளும் வழக்கத்தைப் பின்பற்றி வருகிறோம். தொடர்ந்து ஆண்டுதோறும் நன்கொடை வழங்கி உதவி புரியும் புரவலர் பெருமக்கள் அனைவரையும் நினைவு கூர்ந்து வணங்கி மகிழ்கிறோம்.

அமரர் K.N. இராமச்சந்திரன் அவர்களின் மறைவுக்கு பிறகு, அவரது மாபெரும் இழப்பை ஈடு செய்யும் வகையில் வேலூர் கம்பன் கழகத்தின் செயலாளராக என்னுடைய முயற்சிகளுக்கெல்லாம் பக்க பலமாக துணை நின்று பெருதவி புரிந்து திருமிகு. V.L. சச்சிதானந்தம் அவர்களின் செயற்பாட்டிற்கு எனது உளமார்ந்த ஆழ்ந்த நன்றியை மிக்கப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அவருக்கு அடுத்தபடியாக இப்போது செயல்படும். கழகத்தின் செயலாளர் கவிஞர். ச. இலக்குமிபதி அவர்களின் அனைத்து உதவிகளுக்கும் பொருளாளர் J. அப்பாசாமி ஆகியோருக்கும் எனது உளமார்ந்த நெஞ்சார்ந்த வணக்கங்களைக் காணிக்கையாக்குகிறேன்.

தமிழ்ப்பணி கம்பன் பணி ஆற்றும் வேலூர் கம்பன்கழகம் வளர ஆக்கமும் ஊக்கமும் நல்குமாறு அன்பர்கள் அனைவரையும் வேண்டிக் கேட்டுக்கொள்கிறோம்.

கம்பன் வாழ்ந்தால் தமிழ் வாழும் தமிழ் வாழ்ந்தால் தமிழர் வாழ்வர்

கம்பன் வாழ்க கம்பன் புகழ் வாழ்க வேலூர் கம்பன் விழா வாழ்க.

# வேலூர் கம்பன் கழகத்தின் நிறுவனர்

கழகத்தை வழிநடத்திச் செல்லும் செயல் தலைவர்

கம்பர் பித்தன் **S.N. குப்புசாமி முதலியார்,** B.A.



## கவிதை

முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்
மூர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்
பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்
பேர்த்துமவன் சேவடிக்கே பித்தன் ஆனான்
அன்னையுடன் அத்துனுமே கம்ப னென்றான்
அவன்பெயரைத் தன்பெயர் முன் இணைத்துக் கொண்டான்
தன்னைமறந் திட்டான்தன் நாமம் கெட்டான்
தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன்தாளே"

### கம்பர் பித்தனின் உளமார்ந்த விருப்பம்

தமிழ் நாடக மேடையில் - மயிலாசனத்தில் அமர்ந்தவாறே திருமுருகன் வேடம் தாங்கி நடித்துக்கொண்டிருக்கையில் தனது இறுதி மூச்சை விட்ட பழம் பெரும் நாடக நடிகர் - தேசிய நடிகர் - எஸ்.எஸ். விஸ்வநாததாஸ் போன்றே - இவரும் கம்பனுக்குத் தொண்டு செய்யும் நிலையில் - கம்பன் விழாவின் போதே - தன் உயிர் நீங்க வேண்டும் என்கிற பெரு விருப்பம் தன் அகத்தே கொண்டுள்ளார். தன் இறுதிநாள் வரை கம்பனுக்கு தொண்டு செய்யவும் கம்பர் புகழ் பரப்பவும்மூ கம்பன் விழா நடத்தவும், இறையருளை நாள்தோறும் உளமார விரும்பி வேண்டி பிரார்த்தி வருபவர்

### கம்பர் பித்தனின் அருட்கொடை

தான் உயிர் நீத்த பிறகு - தன்னுடைய இரண்டு விழிகளையும், உடல் உறுப்புக்களையும் தானமாக வழங்கிட அறிவித்துள்ளார்.

**கம்பராமாயணத்தின்பால் இவர்க்கு உள்ள ஈடுபாட்டினையும் புலமைமையும் கம்பர் பணியையும் கணித்தவர் அவர்க்கு வழங்கிய விருதுகள்**

| விருதுகள் | | வழங்கியவர் |
|---|---|---|
| கம்பர் பித்தன் | - | அமரர் கம்பன் அடிப்பொடி அவர்கள். |
| கம்ப ரசிகமணி | - | அமரர் கள்ளிப்பட்டி க.கு. கோதண்டராம கவுண்டர் |
| கம்பர் உள்ளம் நன்குணர்ந்த ரசிகர் திலகம் கம்பர் கவித்திலகம் | - | அமரர் புலவர் திலகம் கீரன் அவர்கள் |
| கம்பர் மாமணி | - | அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர்கள் சங்கம் கம்பன் கழகம், புதுக்கோட்டை |
| கம்பன் கவித்தும்பி | - | தமிழ்ச் சங்கம், ஈரோடு. |
| கம்பராமாயணச் செம்மல் | - | கம்பன் கழகம், சேலம். |
| கம்பராமாயண திலகம் | - | திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் |
| கம்பர் நெறிச் செம்மல் | - | தமிழ்ச் சங்கம், திருவள்ளூர் |
| கம்பன் அடிப்பொடி பரிசில் | - | கம்பன் கழகம், சென்னை |
| கம்பன் விருது | - | ஆழ்வார்கள் ஆய்வு மையம், சென்னை |
| கம்பர் தொண்டு, இலக்கியப்பணி சிறப்பு விருது | - | தெற்கு ரோட்டரி சங்கம், வேலூர் |
| கம்பர் தொண்டு, இலக்கியப் பணி சிறப்பு விருது | - | கோட்டை ரோட்டரி சங்கம், வேலூர் |
| கம்பர் கவிக் கொண்டல் | - | இறைபணி மன்றம், திருவண்ணாமலை |

# நெடிதே வாழ்த்துவோம்.

உலகமாக் கவிஞர் உன்னதத் தமிழின்
நிலைத்த புகழினர் காப்பியப் பாவலர்
"எனக்குத் தெரிந்த புலவருக் குள்ளே
தனித்த சிறப்பின் நிகரில் புலவன்"
நெருப்புக் கண்ணன் முண்டாசுத் தலைவன்
விரித்த பெருமையன் பாரதி இப்படிப்
பாடிக் காட்டினான். கம்பரின் சீர்மையைக்
கோடிட்டுக் காட்டினான். நாடு உணர்ந்தது
கங்கையிற் புனிதம் மிக்க காவிரி
என்றுமுள தென்தமிழ் என்றே தாய்மண்
பற்றையும் தண்டமிழ்ப் பற்றையும் கம்பர்
கற்றுக் கொடுத்தார். நினைவில் நிறுத்தினோம்
கல்வியில் பெரிய கம்பனின் சொல்லில்
எல்லையே இல்லாக் காதல் கொண்டேன்
பல்லோர் உள்ளனர். பெருஞ்சீர் பரப்பிடும்
நல்லோர் உள்ளனர் / சரித்திரச் சிறப்பு
மாறா வேலூர் கம்பரின் புகழை
வீறுடன் கூறிப் பெருமை கொண்டது
இங்கே
பலவாம் சங்கம் வளர்த்திடும் செம்மல்
நலமே எங்கிடும் விளைத்திடும் நெஞ்சர்
கம்பரின் பித்தர் கற்கண்டுச் சொல்லர்
கம்பர் மாமணி கம்பன் கவித்தும்பி
முத்தமிழ்ச் செல்வர் நாடகக் காவலர்
வித்தகத் திருக்குறள் வளர்நலச் செம்மல்
நமக்குத் தொழில் தொண்டு நல்லன
அமைதியில் புரிதல் என்ற கொள்கையர்
எண்ணரும் மனித நேய மாமணி
நண்பர் துணையுடன் காப்பியம் தந்த
மாப்பெரும் புலவர்க்கு விழா நடத்துகின்றார்.
கூப்பிய கையுடன் போற்றுவோம்
நாப்படு உரையால் நெடிதே வாழ்த்துவோம்.

கவிமாமணி. முனைவர். வேலூர். ம. நாராயணன், எம்.ஏ.

# கம்பன் கேட்ட வரம்

-சேதுபதி

வரங்களாலாய வாழ்வியல் காப்பியம் கம்பராமாயணம். வரமாவது, தவம் ஒத்த ஒழுக்க நெறியில் வாழ்ந்து தம்மினும் மேலானவரின் அன்புக்கும் பாத்திரமாகித் தமக்கு வேண்டியதை விண்ணப்பித்து அவரிடமிருந்து பெற்றுக் கொள்ளும் பரிசாகும். இஃது கடவுள், பெற்றோர், தம்மினம் மூத்தோர் முதலானவர்களிடமிருந்து பெறுதல் ஆகும். வரம் வாங்குவோர்க்கும் பெறுவோர்க்கும் சிறப்பினைத் தருவதாக அமைவது அமைய வேண்டியது. இஃது. கேவலம் பிச்சையோ, இழிவு தரும் இரங்கத்தக்க பொருளோ அன்று. மேன்மையுடையாரிடத்துத் தக்கார் ஒருவர் கேட்டுப் பெறத்தக்கது அது என்பதனால் அதற்கு வரம் என்று பெயர். வரம் என்பதற்கு 'ஆசீர்வாதம், தெய்வம் முதலியவற்றால் பெறும் பேறு, அனுக்கிரகம்' முதலான பொருள்களைத் தருகின்றது தமிழகராதி. (கழகத் தமிழகராதி, ப.817)

தீயோர்க்கு வரங்களே சாபங்களாய் வாய்த்தலும் நல்லோர்க்குச் சாபங்களே வரங்களாய் அமைந்து போவதும் வரலாற்று நிகழ்வுகள். தன்னலமாகவோ பொது நலமாகவோ கருதிக் கேட்டும் வரங்கள் எவையாயினும் அவை பொதுவில் உலகப் பயன் நல்குவதாகவே அமைந்து விடுகின்றன என்பதை இலக்கியங்கள் காட்டுகின்றன.

கம்பராமாயணத்துக் கதைப்போக்கில் இடம்பெறும் வரங்கேட்டல், வழங்கல் நிகழ்வுகள் அநேகம். அவற்றுள் அசோகவனச் சீதை, அனுமனிடம் கேட்ட அருள் வரங்குறித்துச் சிந்திப்பது இக்கட்டுரை.

*தாய்மையின் திருவுரு சீதை :-*

பெண்மையின் உச்சபட்சத் திரட்சியாகக் கம்பன் காட்டும் உன்னதக் கதாபாத்திரம் சீதை. வான்மீகி வடமொழியில் வார்த்த சீதை இந்தியப் பெண்மையின் இலக்கணம் என்றால், கம்பன் தமிழில் படைத்த சீதை உலகம் கருதிப் பேணும் தாய்மையின் திருவுரு. பேதைமை நிறைந்த சராசரிப் பெண்ணாகப் பிறந்து தமது அனுபவ மேதைமையால் வளர்ந்து, 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாத பெண்மையாய் 'மிளிர்வள் அவள்.

'எல்லை நீத்த உலகங்கள் யாவையும் தன் சொல்லினால் சுடும் தன்னாற்றல் உணர்ந்த அவள் தன் கணவனாகிய தூயவனின் வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசிய மேதையை கொண்டவள். இஃது ஆணாதிக்கத்தை முன்னிறுத்தும் பெண்மையின் பேதைமைப் போக்கன்று: நிறைமையின் வெளிப்பாடு தன்னாற்றலைத் தானே தாங்கிநின்று வெளிக்காட்டாத பெருமிதம் இஃது, இராமனுக்கு என்பதை விடவும் சீதைக்கே சிறப்புச் சேர்க்கும் சீர்மை. இத்தகு பெண்மையின் பேருரு, தன்னைத் தொழும் அருட்தொண்டனாகிய அனுமனிடத்தில் கேட்ட அருள் வரம் அவளது தாய்மையின் வெளிப்பாடாக அமைந்திருக்கின்றது எனலாம்.

*அனுமனின் இரண்டாம் தூது :-*

இராவண வதம் முடித்து, இப்பெரு வெற்றி தந்த வீடணனைத் தழுவி நீதிகள் உரைத்த கொண்டிருக்கின்றான் இராமன். அப்பொழுது, அருகில் வணங்கிநின்ற அடல் மாருதியாகிய அனுமனைக் கண்டதும் அவன்வழி சீதை செப்பிய மொழிகள் நினைவுக்கு வந்து விடுகின்றது இராமனுக்கு. உடனே, மீண்டும் ஒரு தூது சொல்லி வர அனுமனை அனுப்புகின்றான் இராமன். குறிப்பிற் பொருள் உணர்த்தும் அனுமனுக்கு விரித்தா தூது மொழி விளம்வேண்டும், எனவே பின் வருமாறு தூதுக் கருத்தினைச் சுருங்க உரைக்கின்றான் இராமன்.

"துப்புஉறச் செய்ய வாய்மணித் தோகைபால்
செப்புறு, இப்படிப் போய் எனச் செப்பினான் "கம்ப.யுத்த.மீட்சிப்படலாம், பா 99640.

காற்றினும் கடிது சென்ற அனுமன் சீதையை வணங்கிச் 'சோபனம்' (மங்கலம்) பாடி நடந்த நிகழ்வைச் சுருங்கச் செல்லி விளக்கி நிற்கின்றான். யாவும் கேட்ட. சீதாப்பிராட்டி ' இனைய் இன்னது இயம்புவது என்பது ஓர் நினைவும் இன்றி நெடிது இருப்பது 'கண்டு அனுமனுக்கு ஐயம். இன்ப அதிர்ச்சியோ? இன்பமோ துன்பமோ அதிர்ச்சி ஆபத்தானது ஆயிற்றே!

"யாது இதற்கு ஒன்று இயம்புவல்? என்பது
மீது உயர்ந்த உவகையின் விம்மலோ ?

தூது பொய்க்கும் என்றோ? எனச் சொல்லினான்
நீதி வித்தகன்.." (கம்ப. யுத்த. மீட்சிப் படலம், பா.9976). என்கின்றான் கம்பன்.

*சீதையின் நெகிழ்மொழி :-*

பேசுமொழியற்று நெகிழ்வுற்றவளாகிப் போன சீதை அனுமனின் வினாவில் திடுக்கிட்டவளாய் விழித்து, 'முன்னொரு தூது வந்து நீக்குவென் மொய் சிறை' என்று பேசினை. பின்னை இன்று, இப்பொழுது வந்து உவகை பேசினை, என்ன சொல்வது? என்ன பேற்றினை ஈகுவது? என்பதை நினைந்து உரை மறந்து செயலற்றிருந்தேன் என்று செப்பினாள்.

நினைத்தற்கு அரிய பெரும்பணியாற்றி வணங்கி நிற்கின்ற அனுமனைக் காணக்காண அவளின் அன்பும் உவகையும் பெருகி வளர்கின்றன. 'செய்யாமற் செய்த அனுமனின் உதவிக்கு வையகமும் ஆற்றலரிது' என்பது உணர்ந்த சீதை, நெகிழ்வின் உச்சிக்கே சென்று விடுகின்றாள். 'உலகம் மூன்றும் உதவற்கு ஒரு தனி விலை இலாமையையும், அவை நிலை இலாமையும்' நினைந்த சீதை, தன்னை வணங்கி நிற்கின்ற அனுமனை நோக்கி, 'நின்னை என் தலையினால் தொழவும் தகும் - தன்மையோய்' என்கின்றாள்.

"ஆதலான் ஒன்று உதவுதல் ஆற்றலேன்:
யாது செய்வது? என்று எண்ணி இருந்தனென்:

வேத நல்மணி வேகடம் செய்தன்ன
தூது! என் இனிச் செய்திறம்? சொல்" என்றாள்," (கம்ப. யுத்த. மீட்சிப் படலம்,
பா.9980 என்று அவ்வுணர்வு மொழியினைக் கம்பன் உரைக்கின்றான்.

*அநுமன் கேட்ட வரம் :-*

'என்ன வேண்டும் சொல்' எனக் கேட்ட அன்னை சீதையைப் பார்த்ததும் அநுமனுக்கு முன்னைய நாள் நினைவுக்கு வந்து விடுகின்றது. கொடுந்துயர் உறும்படியாக இராவணன் வந்து மிரட்டிச் சென்றபிறகு, காவலுக்கிருந்த அரக்கியர் உரைத்த கொடுஞ்சொற்களும் மிரட்டல்களும் அநுமனின் காதில் அப்பொழுதும் கொடூரமாய் ஒலித்துக் கொண்டே இருந்தன போலும்!

"கொல்மின்! கொல்மின்! கொன்று குறைத்து குடர்ஆரத்
தின்மின்! தின்மின்!" (கம்ப. சுந்தர. காட்சிப் படலம், பா.5221).

என்று அதட்டியும், இராவணன் ஒருமுறை மிரட்டிச் சொல்லிய தொடர்களை மறுபடி மறுபடி உரைத்தும் துயர்செய்த அரக்கியர் இன்னும் அழியாது அருகிருந்து பார்த்துக் கொண்டிருப்பதைக் காணப் பொறாதவனாக அநுமன் தவிக்கின்றான். அன்று அந்தக் கணத்தில் தான் மட்டும் வந்து நில்லாவிடில் மாதவிப் பொதும்பரிடைப் போய்த் தற்கொலை புரியச்சென்ற சீதையினை யாரே காக்கமுடியும்? அவள் எண்ணியவண்ணம் அன்று நடந்திருந்தால் தன் தூது என்னாம்? தூதனுப்பிய இராமனின் நிலை என்னாம்? இராமாயணக் கதைதான் என்னாம், தன் கண்முன்னாலேயே இக்கொடுந்துயர் இழைத்த அரக்கியர் தான் இல்லாத நிலையில் என்னவெல்லாம் மொழிந்திருப்பார்கள்? யாதெல்லாம் புரிந்திருப்பார்கள், அதுவும் தன்னொத்த பெண்ணிற்கு? என்று மூண்டெழும் சினத்தோடு அநுமன் சிந்திக்கின்றான். கொடுஞ்செயல் புரிந்த இராவணனைத் தன்தோளின்மீது இருந்து இராமன் வதைத்த திறம் நோக்கிய அநுமனுக்கு இவ்வின்னல்செய் அரக்கியர் அழிவும் காணவேண்டும் என்று தோன்றி விடுகின்றது. அதேசமயம், அரக்கர்களுள் நின்று அருந்திறல் இராமனுக்கு வீடணன் ஆற்றிய உதவி போல, அசோகவனச்சீதைக்கு உடனிருந்து உதவிபுரிந்த திரிசடையின் பேரன்பும் நினைவுக்கு வருகின்றது. அவளைத் தவிர இவ்வரக்கியர் அனைவரையும் தன் நகங்களால் பிளந்து எமனுக்கு இரையாக்கத் துடிக்கின்றான். ஆதலால்,

"உரைஅலா உரை உன்னை உரைத்து, உராய்
விரைய ஓடி, 'விழுங்குவம்' என்றுளார்
வரை செய் மேனியை வள் உகிரால் பிளந்து,
இரை செய்வேன், மறலிக்கு இனி.." (கம்ப. யுத்த. மீட்சிப் படலம், பா.9983).

என்றும்.

"குடல் குறைத்து, குருதி குடித்து, இவர்
உடல் முருக்கியிட்டு உண்குவேன்" (கம்ப. யுத்த. மீட்சிப் படலம், பா.9984).
என்றும் அடங்காச் சினத்தோடு

இவ்வினையாற்ற சீதையிடம் வரம் வேண்டி நிற்கின்றான் அநுமன்.

*அரக்கியரின் 'மெய்ச்சரண்' :-*

இவ்வாறு அனுமன் உரைக்கக் கேட்டு அஞ்சிய அரக்கியர் அன்னை சீதையின் தாள்மலர்களைப் பற்றி, 'அன்னை நின் பாதமே விடலம்: மெய்ச் சரண்' என்று பணிந்தனர். ஈங்கு மெய்ச்சரண் என்பதற்கு மெய்யான சரண் என்றும் எம்மெய்யாகிய உடம்புகட்டு நீயே காப்பு என்றும் பொருள் கொள்ளலாம். தற்சமயம் மட்டும் தற்காத்துக் கொண்ட பின்னர் தம் இயல்பாகிய அரக்கியர் குணத்துக்கு மாறிவிடுகின்ற நோக்கோடு அடையும் பொய்ச்சரண் இஃது அன்று என்பதனை உணர்த்தவும் கம்பன் நினைந்தோ அல்லது கவிப்போக்கிலோ பெய்த சொல் இது.

என்றும் இங்கு இடமுண்டு. தன்னைத் தாய் என்று சரண்புகும் யாரையும் தாங்குதல் பெண்மையின் இயல்பு. அதன்படி காக்க நினைந்தவளாக சீதை அமைந்தாள் என்பதால் தான்.

"அன்னை, 'அஞ்சன்மின், அஞ்சன்மின்! நீர்" (கம்ப. யுத்த. மீட்சிப் படலம், பா.9985) என்று அரக்கியர்தமைப்பார்த்து உரைத்ததாகக் கம்பன் காட்டுகின்றான். இந்த இடத்தில் வான்மீகி கதையினையும் ஒப்பு நோக்கல் தக்கது.

*சீதை சொல்லிய கதை :-*

மேற்சுட்டிய சூழலில் வான்மீகி படைத்த சீதை, அனுமனின் கோபம் அடங்கப் பின்வரும் கதையினைக் கூறுகின்றாள்.

"ஒரு காடு: அங்கே ஒரு வேடன்: அவனை ஒரு புலி துரத்தியது.. அவன் பயந்து ஒரு மரத்தில் ஏறினான். அங்கே ஒரு கரடி இருந்தது. அதனைக் கண்டு அவன் பயந்தான். அப்பொழுது கரடி அவனைப் பார்த்து.. "பயப்படாதே, நாமிருவரும் ஒற்றுமையாகச் செயல்படுவோம்" எனக் கூறியது. வேடன், "சரி" என்றான். இருவரும் மரத்தில் தங்கியிருந்தார்கள். சிறிது நேரத்தில் வேடனுக்குத் தூக்கம் வந்தது. கரடி அவளைப் பாதுகாப்பாகப் பிடித்துக்கொள்ள வேடன் அதன் மடியில் பாடுத்துத் தூங்கினான். அப்பொழுது புலி கரடியைப் பார்த்து, வேடனைக் கீழே தள்ளிவிடு: நான் சாப்பிட்டதும் போய் விடுகிறேன்: நீ தப்பலாம்" என்றது. அதற்குக் கரடி, "நான் துரோகம் செய்யமுடியாது" எனச் சொல்லி மறுத்துவிட்டது. சிறிது நேரம் சென்றதும் வேடன் விழித்துக்கொண்டான். கரடி அவன் மடியில் படுத்துக் கொண்டு தூங்கியது. புலி இப்பொழுது மனிதனிடம் கரடியிடம் கூறியது போலக் கூறியது. " இதுதான் சரியான திட்டம்" என அந்த வேடன் எண்ணிக் கரடியை உருட்டிவிட்டான். ஆனால கரடி மரக்கிளையைப் பிடித்துக் கொண்டு மறுபடியும் ஏறிவிட்டது. வேடன் பயந்தான். அதற்குக் கரடி, "நீ துரோகம் செய்து விட்டாய். இருந்தாலும் உன்னை மன்னிக்கிறேன்" என்றது. (முரு.பழ. இரத்தினம் செட்டியார், 'இதோ சைவ சித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள்', பக்.13-14)

இந்தக் கதையை எடுத்துக் கூறிய சீதை, 'தனக்குத் துரோகம் செய்த மனிதனை ஒரு கரடி மன்னித்திருக்கும்பொழுது, எனக்குத் துரோகம் செய்த இந்த அரக்கிகளை நீ ஏன்

மன்னிக்கக் கூடாது, என்று அனுமனிடத்தில் வினவுவதாக வான்மீகம் கூறுகின்றது. ஆனால் கம்பன் காட்டுகின்ற காரணமோ வேறு வகையானது..

*கம்பன் காட்டும் காரணம் :-*

கம்பனின் சீதை, அரக்கியர் செயலையும் தனக்கு இன்னலையும் ஒருசேர இணைத்துப் பார்க்கின்றாள்: காய்தல் உவத்தல் இன்றி ஆய்வு செய்கின்றாள்: இந்தச் சிறைக்குள் தான் சிக்க நேர்ந்ததற்குத் தானே காரணம் என்று உணர்கின்றாள். வஞ்சனை மானின்பின் போன தன்சிந்தனையும், இளையோனை முனிந்த நஞ்சனைய சொல்லும், பின்னர் நிகழ்ந்தனவும் தான் இழைத்த வினை என்று ஆழ்ந்து உணர்ந்த காரணத்தால்,

"யான் இழைத்த வினையின் இவ்இடர்
தான் அடுத்தது.. "(கம்ப. யுத்த. மீட்சிப் படலம், பா9986). என்கின்றாள்.

அதேசமயம் தானும் தன்கணவனோடு கொழுநனும் இக்கானகம் வரக் காரணமாய் கூனியும் அவளது நினைக்கு வருகின்றாள். ஆதலால் அரக்கியரை விடவும் கொடியாளாகக் கூனியைக் குறிப்பிடுகின்றாள் சீதை. இக்கருத்து இங்குக் கவனிக்கத் தக்கது..

*யார் கொடியர்?*

சீதையின் ஆய்வு நோக்கில் அவளையும் உள்ளடக்கி மூவர் உள்ளனர். மூவரும் பெண்டிர். அனுமனின் நோக்கில் முதன்மையர் அரக்கியர். சீதையின் நோக்கில் இவ்விடருக்கு இடம்நல்கி வினை புரிந்த 'தான்'. பின்னர் கூனி. இவர்களில் யார் கொடியர் ?

சீதையின் சிந்தை நடுநிலையோடு ஈங்கு வெளிப்படுகின்றது. அனுமனது வரத்தினை ஒட்டி அரக்கியரைப் பழி வாங்குவதோடு இப்பழிவழங்குபடலம் முற்றுப்பெறுமா? பின்னும் பின்னும் தொடரும் வன்முறைக்கு அல்லவா இக் கொடுஞ்செயல் வழிவகுக்கும். சீதையின் எண்ணப்படி பழிவாங்குபடலம் கூனியிலிருந்து தொடங்குகின்றது.

"பண்டைநாள் இராவகன் பாணி வில் உமிழ்
உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளி . " (கம்ப. அயோ. மந்தரை சூழ்ச்சிப் படலம், பா.1447).

அவன் செய்த வினைதானே இத்தனைக்கும் காரணம். சிறுபிள்ளையின் விளையாட்டு என்று இராமனின் அச்செயலை எண்ணி அவள் பொறுத்திருந்தால், தவறேயாயினும் அவள் பெருமனத்தோடு மன்னித்திருந்தால் கைகேயி கேட்ட வரம் சாபமாகியிருக்காதே! தசரதனும் மாண்டிருக்கமாட்டான். இத்துயர்க்கதையும் நீண்டிருக்காது. ஆதலினால், 'கூனியின் கொடியார் அலரே' என்று கொடுஞ்செயலை முன்னிறுத்திக் கூனியைக் காட்டி அரக்கியரை அனுமனின் சினக் குறிப்பிலிருந்து விலக்குகின்றாள் சீதை.

*அரக்கியர் செயல் - கொடிதா? அறமா?*

ஈங்கு, அனுமனின் நோக்கில் கொடிதாகத் தெரிந்த அரக்கியரின் செயல் சீதையின் பார்வையில் ஒருவகையில் அறமாகவே படுகின்றது. தமது அரசனின் கட்டளைக்கு

ஆட்பட்டுத் தத்தம் கடமையை ஆற்றிய பணியாட்களாகவே, பணிப்பெண்டிராகவே அரக்கியர் சீதையின் பார்வைக்குப்படுகின்றனர். அந்த வகையில் கூனியாகிய மந்தரையும் ஒரு பணிப்பெண்: அரக்கியரும் பணிப் பெண்டிர். இவ்விரு வகையினரின் செயற்பாடுகளை ஒப்பு நோக்குகின்ற பொழுது அரக்கியர் செய்தது கடமை. கூனி ஆற்றியது கொடிய வஞ்சகம். அவள் செயல், அவளுக்கும் தீது: அவளது தலைவியாகிய கைகேயிக்கும் தீது: தீயெனப் பற்றியோர்க்கும் தீமை பயக்கும் தீது. ஆதலின் அனுமன் நினைத்த வண்ணம் தண்டிக்க முயன்றால் அது கூனியிலிருந்து தொடங்கவேண்டும். அதனை அனுமனின் தலைவனாகிய இராமனும் செய்யவில்லை. அவளைப் பெற்ற அன்னையினும் உயர்ந்த கைகேயியும் செய்யவில்லை. காரணம் மன்னிக்கும் குணம் மானிடர்க்கு இயல்பு என்பதை உலகு உணரவேண்டும் என்பதற்குத்தான் இவ்வளவு நீட்சியும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றான் கம்பன்.

மற்றொன்றையும் ஈங்குப் புரிந்து கொள்ளவேண்டும். அரக்கியர் தாம் இழைத்த கொடுமையை உணர்ந்து வருந்தி வணங்கும் தன்மையராயினர். ஆனால் இறுதிவரைக்கும் நிமிரவே முடியாத கொடுமனத்தொடு கூனி இருக்கின்றாள். அவளே மன்னிக்கப்படும்பொழுது இவ்வரக்கியர் எவ்வளவு இரக்கத்திற்கு உரியவர்கள் என்பதனையும் குறிப்பால் உணர்த்துகின்றாள் சீதை. இத்தனை விளக்கியும் அனுமன் இரங்கவில்லை எனில் இத்தண்டனைக்கு உரியவளாகத் தானும் இருப்பதை முதலில் சுட்டுகின்றாள் சீதாப்பிராட்டி.

*சீதை வேண்டிய செவ்வரம்?*

ஆக, தன்பிழை, கூனி இழைத்த கொடுஞ் செயல் ஆகியவற்றோடு ஒப்பு நோக்க அரக்கியர் ஆற்றியது குற்றமே இல்லை என்பது சீதையின் கருத்து. ஆயினும் ஆணைபோல அனுமனுக்கு வழங்காமல் அவனது அன்புக்கு முன்னால் நெகிழ்ந்துபோய் ஒரு வரமாக வேண்டுவது கற்போர் இதயம் களிக்கச் செய்வது.

"யான் இழைத்த வினையினின் இவ் இடர்
தான் அடுத்தது, தாயினும் அன்பினோய்!
கூனியின் கொடியார் அலரே, இவர்!
போன அப்பொருள் போற்றலை, புந்தியோய்!" (கம்ப. யுத்த. மீட்சிப் படலம், பா. 9986) என்பது கம்பனின்வாக்கு.

*கம்பன் வேண்டும் வரம் :*

இவ்வாறு, "எனக்கு நீ அருள் இவ்வரம்" என்று அனுமனிடம் வேண்டி நிற்பவள் அன்னை சீதை தான் வேண்டும் இவ்வரத்தினை நல்குதற்கு மறுப்பேதும் சொல்லாதபடிக்கு அவள் அனுமனை நோக்கி, "தாயினும் அன்பினோய்" என்று விளிப்பது கம்பனின் அற்புதச் சொல்லாடல். தம்மைப் பெற்ற தாய்க்கே பிள்ளைகள் தீமை இழைத்தாலும் அதனைத் தாங்கி மன்னிப்பது தாயின் குணம் என்பதை ஈங்கு இத்தொடலால் உணர்த்துகின்றான் கம்பன்.

பழிவாங்கும் மிருகத்தன்மையிலிருந்து மாறுபட்டு மன்னிக்கும் தன்மைக்கு உரிய நிலையில் மானுடம் உயர்வதை உணர்த்துவதையே தமது காப்பியத்தின் அடிநாதமாக கொண்ட கம்பன், 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என்று முதல் நாள் போரில் இராவணனை மன்னித்த பாங்கிற்கு இணையாக அன்னை *சீதை*யின் அருட்குணத்தினை ஈங்கு இந்தக்காட்சியின் மூலம் சித்திரமாக்குகின்றான்.

கரடி கதையினை முன்னிறுத்தி வான்மீகி மன்னிப்பு எனும் பண்பை வலியுறுத்தினாலும் அங்கு மானுடம் குன்றி நிற்பதை ஏற்க மறுக்கின்றது கம்பனின் தமிழ்உள்ளம். 'நடையில் நின்று உயர் நாயகனாகிய' இராமனை விடவும் இப்பண்பிற்கு இனிய சான்று வேறு இல்லை என்பதைக் கம்பன் வெளிப்படையாகச் சொல்லவும் இல்லை. சொல்லாமலும் இல்லை.

"யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்
போர் ஒடுங்கும் புகழ் ஒடுங்காது: தன்
தார் ஒடுங்கல் செல்லாது: அது தந்த பின்
வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ?" (கம்ப.அயோ. மந்தரை சூழ்ச்சிப்படலம், பா.1419)

வசிட்டன் வாக்காக உறுதிப் பொருள் மொழிந்த கம்பன் அனைத்துப் போருக்கும் காரணமாகும் பழிவாங்கும் நோய்க்கு மருந்தாக மன்னிக்கும் பண்பை முன்வைத்துக் காட்டுகின்றான். ஆண்கட்கு இராமன் எனில் பெண்டிர்க்குச் சான்று *சீதை* என்பதாய் இங்கு இந்நிகழ்வை முன்வைக்கும் கம்பன் தாய்மை என்பது பெண்மைக்கு மட்டும் உரியதன்று ஆண்மைக்கும் உண்டு. மானுடர்க்கும் உண்டு குரங்கினம் முதலாய அனைத்துயிர்க்கும் வேண்டும் என்கின்ற பெருநோக்கில் *சீதை* வாக்காக மானுடகுலம் நோக்கிக் கம்பன் வேண்டும் செவ்வரம் இதுவெனக் கொள்வதும் பொருந்தும்.

*சீதை* வேண்டிய செவ்வரத்தை அனுமன் கொடுத்தானா இல்லையா என்பதைச் சொல்லாமலேயே கம்பன் அசோகவனத்தை விட்டுப் போர்க்களம் நோக்கிக் கதைப் போக்கில் நம்மை அழைத்துச் சென்றுவிடுகின்றான் கம்பன். சொல்லின் செல்வன் நிறைவேற்றிவிடுவான் என்ற *சீதை*யின் நம்பிக்கை, கதையில் நிறைவேறிவிடுகின்றது. கம்பனின் நம்பிக்கை அவ்வண்ணமே வாழ்வில் நிறைவேறக் கற்போர் மனங் கொள்ள வேண்டும்.

**குறுக்கவிளக்கம்**

1. கம்ப - கம்பராமாணம்
2. அயோ - அயோத்தியா காண்டம்
3. சுந்தர - சுந்தரகாண்டம்
4. யுத்த - யுத்தகாண்டம்

(பாடல் எண்கள், சென்னைக் கம்பன்கழகப் பதிப்பின்படி).

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை தொகுத்தருளிய

# திவ்யப் பிரபந்த பாசுர ராமாயணம்

(பகவத்குணானுபவங்களில் ஆழ்ந்தமிழ்ந்தவர்கள் பன்னிரு ஆழ்வார்கள். ஆங்காங்கே கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எம்பெருமானின் அர்ச்சா மூர்த்திகளைக் கண்ணாரக்கண்டு, அவன் திருவிளையாடல்களையும் அவதார வைபவங்களையும் நினைந்து நினைந்து இவ்வாழ்வார்கள் உள்ளம் நெகிழ வாயாரப்பாடியவைகளின் தொகுப்பே நாலாயிர திவ்யப் பிரபந்தம் எனப்படுகிறது. ராமாயண தத்வார்த்தங்களை உலகுக்கு உவந்தருளிய பெரியவாச்சான் பிள்ளை என்னும் மாமுனிவர், பன்னிரு ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்த பாசுரங்களிலுள்ள பதங்களையே தொகுத்து, ராமாயணமாக அருளிச் செய்திருக்கிறார். இதை அநுதினமும் பாராயணம் செய்தால் நாலாயிர திவ்யப் பிலபந்தத்தை பாராயணம் செய்த பலனும், ராமாயண பாராயண பலனும் ஒருங்கே கிடைக்கும்.)

## பால காண்டம்

திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ
நலமந்தமில்லதோர் நாட்டில்
அந்தமில் பேரின்பத்தடிய ரோடு
ஏழுலகும் பேரின்பத்தடிய ரோடு
எழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும்
அயர்வறும் அமரர்கள் அதிபதியான
அணியார் பொழில்சூழ் அரங்க நகரப்பன்
அலைநீர்க கடலுள் அழுந்தும் நாவாய் போல்
ஆவாரார் துணையென்று துளங்கும்
நல்ல அமரர் துயர் தீர
வல்லர்கள் இலங்கை பாழ்படுக்க எண்ணி
மண்ணுலகத்தோ ருய்ய
அயோத்தி என்னும் அணி நகர்த்து
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்க்
கௌசலை தன் குல மதலையாய்த்
தயரதன் தன் மகனாய்த் தோன்றிக்
குணம் திகழ் கொண்டலாய்
மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்வி காக்க நடந்து
வந்தெதிர்ந்த தாடகை தன் உரத்தைக் கீறி
வல்லரக்கர் உயிருண்டு கல்லைப் பெண்ணாக்கிக்
காரர் திண்சிலை யிறுத்து,
மைதிலியை மணம் புணர்ந்து
இருபத் தொருகால் அரசு களை கட்ட
மழுவாளி வெவ்வரி நற்சிலை வாங்கி வென்றிகொண்டு
அவன் தவத்தை முற்றும் செற்று
அம்பொனொடு மணிமாட அயோத்தி எய்தி

## அயோத்தியா காண்டம்

அரியணை மேல் மன்னன் ஆவான் நிற்கக்
கொங்கைவன் கூனி சொற் கொண்ட
கொடிய கைகேயி வரம்வேண்ட
அக் கடிய சொற் கேட்டு
மலக்கியமா மனத்தனாய் மன்னவனுமாறதொழியக்
குலக்குமரா ! காடுறையப் போ என்று விடை கொடுப்ப
இந்நிலத்தை வேண்டாது
ஈன்றெடுத்த தாயாரையும் இராச்சியமும் ஆங்கொழிந்து
மைவாய களிறெழிந்த மாவொழிந்து தேரொழிந்து
கலனணியாதே காமரெழில் விழலுடுத்து
அங்கங்கள் அழகு மாறி
மானமரு மெனநோக்கி வைதேவி யின் துணையா
இளங்கோவும் வாளும் வில்லும் கொண்டு பின்செல்லக்
கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்து பரிமாவும்
திரியும் கானம் கடந்து போய்ப்
பத்திடைக் குகன் கடத்தக் கங்கை தன்னைக் கடந்து
வனம் போய்ப் புக்குக் காயோடு நீடு கனியுண்டு
வியன் கானம் ரத்தி நீழல்
கல்லணைமேல் கண் துயின்று
சித்திரகூடத் திரும்ப, தயரதன் தான்
நின் மகன் மேல் பழிவிளைத் திட்டு
என்னையும் நீள்வானில் போக்க
என் பெற்றாய் கைகேசீ !
நானும் வானகமே மிக விரும்பிப் போகிறேன்
என்று வானேறத்
தேனமரும் பொழில்சாரல் சித்திரகூடத்து
ஆனை புரவி தேரொடு காலாள்
ஆணி கொண்ட சேனை சுமந்திரன்
வசிட்டருடன் பரத நம்பி பணியத்
தம்பிக்கு மரவடியை வான்பணம் வைத்துத் குவலயத்
துங்கக் கரியும் பரியும் இராச்சியமும்
எங்கும் பரதற் கருளிவிடை கொடுத்துத்
திருவுடைய திசைக்கருமம் திருத்தப்போய்த்
தண்ட காரணியம் புகுந்து

## ஆரண்ய காண்டம்

மறை முனிவர்க்கு
அஞ்சேல்மின் என்று விடை கொடுத்து
வெங்கண் விறல் விராதனுக விற்குனித்து
வண்டமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கிப்
புலர்ந்தெழுந்த காமத்தால் சீதைக்கு நேராவன்
என்னப் பொன்னிறங் கொண்ட
சுடுசினத்த சூர்ப்பணகாவைக்
கொடி மூக்கும் காதி ரண்டும்
கூரார்ந்த வாளால் ஈரா விடுத்துக்
கரனொடு தூடணன் தன்னுயிரை வாங்க
அவள் கதறித் தலையில் அங்கை வைத்து
மலையிலங்கை யோடிப்புகக்
கொடுமையில் கடுவிசை அரக்கன்
அலைமலி வேற் கண்ணாளை அகல்விப்பான்
ஒருருவாய் மானை யமைத்துச் சிற்றெயிற்று
முற்றல் மூங்கில் மூன்று தண்டத்தனாய் வஞ்சித்து
இலைக் குரல்பில் தனி யிருப்பில்
கனி வாய்த் திருவினைப் பிரித்து
நீள் கடல்சூழ் இலங்கையில்
அரக்கர் குடிக்கு நஞ்சாகக் கொடுபோய்
வம்புலாங்கடிகாவில் சிறையாய்வைக்க
அயோத்தியர்கோன் மாயமான் மாயச் செற்று
அலைமலிவேற் கண்ணாளை அகன்று தளர்வெய்திச்
சடாயுவை வைகுந்தத் தேற்றிக்
கங்கலும் பகலும் கண் துயிலின்றிக்
கானகம் படி யுலாவி யுலாவிக்
கணை யொன்றினால் கவந்தனை மடித்துச்
சவரி தந்த கனியுவந்து

## கிஷ்கிந்தா காண்டம்

வன மருவு கவியரசன் தன்னோடு காதல் கொண்டு
மரா மரமேழெய்து
உருத்தெழு வாலி மார்பில்
ஒரு கணை உருவ ஓட்டிக்
கருத்துடைத் தம்பிக்கு
இன்பக்கதிர் முடி அரசளித்து
வானரக் கோனுடனிருந்து வைதேகி தனைத்தேட
விடுத்த திசைக் கருமம் திருத்து
திறல் விளங்கு மாருதியும்
மாயோன் தூதுரைத்தல் செப்ப !

## சுந்தர காண்டம்

சீராரும் திறல் அநுமன் மாக்கடலைக் கடந்தேறி
மும்மதிள்நீள் இலங்கை புக்குக்கடிகாவில்
வாராருமுலை மடவாள் வைதேவி தனைக்கண்டு
நின்னடியேன் விண்ணப்பம் கேட்டருளாய் !
அயோத்தி தன்னில் ஓர்
இடவகையில் எல்லியம் போதினிதிருத்தல்
மல்லிகை மாமாலை கொண்டங்கார்த்ததும்
கலக்கியமா மனத்தளாய்க் கைகேயி வரம்வேண்ட
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனும் மறாதொழியக்
குலக்குமரா காடுறைப்போ என்று விடை கொடுப்ப
இலங்குமனன் தன்னோடங்கேகியதும்
கங்கை தன்னில்.
கூரணிந்த வேல்வலவன் குகனோடு
சீரணிந்த தோழமை கொண்டதுவும்,
சித்திரகூடத் திருப்பப் பரத நம்பி பணிந்ததுவும்
சிறுகாக்கை முலை தீண்ட மூவுலகும் திரிந்தோடி
வித்தகனே ! ராமாஓ ! நின்னபயம் என்ன
அத்திரமே அதன் கண்ணை அறுத்ததுவும்
பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாட
நின்னன்பின் வழிநின்று சிலைபிடித் தெம்பிரானேகப்
பின்னேயங்கு இலக்குமணன் பிரிந்ததுவும்
அயோத்தியர் கோனுரைத்த அடையாளம்
ஈதவன்கை மோதிரமே என்று
அடையாளம் தெரிந்துரைக்க
மலர்குழலாள் சீதையும்,
வில்லிறுத்தான் மோதிரம் கண்டு
அநுமான் அடையாளம் ஒக்கும் என்று
உச்சிமேல் வைத்துகக்கத்
திறல் விளக்கு மாருதியும்
இலங்கையர்கோன் மாக்கடிகாவை யிறுத்து,
காதல் மக்களும் சுற்றமும் கொன்று,
கடி இலங்கை மலங்க எரித்து
அரக்கரகோன் சினமழித்து மீண்டு, அதன்பின்னால்
அயோத்தியர்கோன் தளிர்புரையும் அடியிணைபணிய

## யுத்த காண்டம்

கான எண்கும் குரங்கும் முகவும்
படையார்க் கொடி யோனிலங்கை புகலுற்று
அலையார் கடற்கரை வீற்றிருந்து
செல்வ விபீடணற்கு நல்லானாய்
விரிநீ ரிலங்கை யருளிச்
சரண்புக்க குரைகடலை அடலம்பால் மறுகஎய்து,
கொல்லை விலங்கு பணி செய்ய
மலையாலணை கட்டி மறுகரையேறி
இலங்கை பொடி பொடியாகச்
சிலைமலி செஞ்சரங்கள் செல வுய்த்துக்
கும்பனொடு நிகும்பனும்பட
இந்திரசித் தழியக் கும்பகர்ணன் பட
அரக்கராவி மாள, அரக்கர்
கூத்தர் போலக் குழுமணி தூரமாட
இலங்கை மன்னன் முடி யொருபதும்
தோளிருபதும் போயுதிரச்
சிலைவளைத்துச் சரமழை பொழிந்து
கரந்துணிந்து வெற்றி கொண்ட செருக்களத்துக்
கடிக்கமல வெற்றிகொண்ட செருக்களத்துக்
கடிக்கமல நான் முகனும் கண் மூன்றத்தானும்
எண்மர் பதினொருவர் ஈரறுவர் ஓரிருவர்
மற்றுமுள்ள வானவர் மலர்மழை பொழிந்து
மணிமுடி பணிதர அடியிணை வணங்கக்
கோலத்திருமா மகளோடு
செல்வவீடணன் வானரக் கோனுடன்
இலகுமணி நெடுந்தேரேறி,
சீரணிந்த குகனொடுகூடி
அங்கணெடு மதிள்புடைசூழ் அயோத்தி எய்தி
நன்னீராடிப்
பொங்கிளவாடை முடியும் ஆரமும் குழையும்
முதலா மேதகு பல்கலனணிந்து
சூட்டு நன் மாலைகளணிந்து
பரதனும் தம்பி சத்துருக்கனனும்
இலக்குமணனும் இரவு நண்பகலும் ஆட்செய்ய
வடிவிணை இல்லாச் சங்குதங்கு முன்கை நங்கை
மலர்க்குழலாள் சீதையும் தானும்
கோப்புடைய சீரிய சிங்காதனத்திருந்து ஏழுலகும்
தனிக்கோல் செல்ல வாழ்வித்தருளினார்.

# கம்பன் கவித்துவம்

பாவலர்மணி "சித்தன்" புதுவை - 1.

"உயர் கம்ப நாடனுடன் கவிதை போயிற்று" - என்றார் கவி யாசர் பாரதியார்.

இவர் கம்பனில் எப்படி ஆழ்ந்திருப்பார் - என்று உணர முடிகிறது. பிற்காலத்தில் கவிஞர் கண்ணதாசனும் " கம்பனுக்கு மேலோர் கவிஞன் பிறந்ததில்லை" என்றார் இப்படிப்பட்ட புகழுரைகள் கம்பனுக்கு ஏராளம்.

கம்பனில் அப்படி என்ன சுவையை இவர்கள் கண்டிருக்க முடியும் ?

பாரதி தாசனார் தம் கவிதை யொன்றில் "அன்றுன்று புதுமையடி - தெவிட்டல் உண்டோ" என்றார். அவர் சொன்ன இடம் வேறு இருப்பினும் இவ்வடிகள் கம்பனுக்கும் பொருந்தும்.

ஒவ்வோரு முறையும் படிக்குந்தோறும் படிக்குந்தோறும் புதுப்புதுப் பொருளையும் நயத்தையும் கம்பன் கவிதைகள் நமக்கு வழங்குகின்றன.

கம்பன் கூறியபடி "சான்றோர் கவி" அவன் கவிதை

கவிச்சக்கரவர்த்தி என்றாலே "கம்பன் தான்" என்பது கற்றறிந்தார் முடிவு. வேறு எந்தப் புலவரும் பெறாத பெருமை இது.

ஒட்டக் கூத்தரையும், கலிங்கத்துப் பரணிபாடிய சயங்கொண்டானையும் கவிச்சக்கரவர்த்தி" என்பர். எனினும் அவர்கள் கம்பனுக்குப் பின் வைக்கப்பட வேண்டியவர்களேயாம்.

இனி, "கவித்துவம்" என்பது "கவியாகும் திறமை" திறமையில் கம்பனே மற்றையோரினும் உயர்ந்து நிற்கிறான். "எங்கிருந்து கொட்டினானோ? என்றார் ஒரு கவி. அவரின் மதிப்பீடுசரியே !

உ.வே. சு ஐயர் எழுதுகிறார். "கம்பனுடைய கவிதையை ஒரே வார்த்தையில் வர்ணிக்க வேண்டுமென்றால் - அதன் சிறந்த குணம் "காம்பீர்யம்"

(கம்பீரம் = ஆழம் ஆர்ப்பரிப்பு)

அவனுடைய காவியத்துக்குக் கடலின் இயற்கையும் மாமேருவின் மாட்சியும் அமைந்துள்ளது"என்றார்.

ஐயர் படித்துள்ளபடி படித்தால் தான் அவன் கவித்துவம் நமக்குப் புலனாகும். வான்மீகியை விடக் கம்பன் வாக்கில்தான் வேத்துவம் மிகுந்துள்ள நன்பர்.

கடவுள் வணக்கப் பாடல் ! "உலகம் யாவையும்" என்று தொடங்கி" சரணாங்களே" என்று முடிகிறது.

மெய்யடியார், முதலில் தாங்கள் இறைவனிடம் ஈடுபடுவர். பிறகு உலகோரையும் ஈடுபடச் செய்வர். "சரணாங்களே" என்று தொடரைச் " சரண்+நாங்கள்" என்றும் சரண் + ஆகுங்கள் " என்றும் பிரிக்கலாம்,

சரண் நாங்கள் - "உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்ற ஆண்டாளின் அருள்வாக்கைக் காண்க.

இனி, சரண் + ஆகுங்கள்" என்றும் பிரிக்கலாம்,

இனி, சரண் + ஆகுங்கள் என்று பிரித்தால் "ஆகுங்கள்" கம்பருக்கு ஏவல் செய்திருக்கிறது.

இப்படி ஒரு சிறு சொற்றெடரில், வைணவ சித்தாந்தத்தி ஆழ்வார்கள் பேசியுள்ள படியைப் பின்பற்றி அமைந்துள்ள அழகைக் கவித்துவம் என்று சொல்லாமல் வேறென்ன சொல்வது?

இளமகளிர், அவர்களுக்கு வேல் பேன்ற பெரிய கண்கள். இயற்கையில் அவை கரிய கண்கள், சுக்கரு விழிகள் இராமபிரான்மீது படிந்ததால் அச்செம்மலின் மேனி கருநிறத்தைப் பெற்றனவோ ? அல்லது, புயல் வண்ணனாகிய அவன் திரு மேனியில் படிந்ததால் அவர்கள் கண்கள் கறுத்தனவோ? என்றான். இது தற்குறிப்பேற்றம்.

இவைகளால் மகளிர் அவன் திருமேனி அழகில் ஈடுபட்டதை தம் குறிப்பால் சுவைபடத் தந்தது கம்பனின் கவித்துவம்தானே ?

"பஞ்சு மணி விரலினார் தம்
படைநெடுவ் கண்கள் எல்லாம்
நெஞ்சவே ஐயன் மெய்யின்
கருமையைச் சேர்ந்ததவோ தாம் ?
மஞ்சுசுன மேனியான் தன்
மணிநிறம், மாதரார் தம்
அஞ்சன நோக்கம் போர்க்க
இருண்டதோ அறிகிலேமாய் !

(கம்ப உலா 10)



# இராமன் சீதை முதல் சந்திப்பு

இது உலகில் எழுந்த பல்வேறு இராமாயணங்களிலும் இல்லாத ஒரு கற்பனை என்பர்.

இது தமிழ் அகப்பொருள் மரபுப்படி அமைந்த ஒன்று. அகப் பொருள் இலக்கணம் இதைக் "காட்சி" என்னும் என்றாலும் அதைக் கம்பன் சொல்கிற அழகே தனி.

"எண்ண அரு நலத்தினாள் இணையலர் நின்றுழி
கண்ணொடு கண் இணை கவ்வி, ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலை பெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் - அவளும் நோக்கினாள்".

(கம். மித் : 35)

இப்பாடலில், சீதை இராமன் இருவர் காதல் நோக்கைக் கூறுகிறார். இராமபிரான் கண் சீதை மீது விழ, அவள் கண் இராமபிரான் மீது விழ, அப்போது இருவர் மனவுணர்ச்சியும் ஒற்றுமைப்பட்டு ஒரு தன்மைத்தான் காதலைக் கொண்ட தென்க" (வை. மு.கோ. உரை) இது கம்பனின் கற்பனை வான்மீகத்தில் இல்லாத ஒன்று.

"வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்" கம்திமி : 37

"கண்பார்வையால் காதல் கொண்டு ஒருவர் மனத்தில் மற்றொருவர் குடி கொள்ளலாயினர்"

மின்னல் வேகக் காதல் ஈர்ப்பினை உணர்த்தும் பாடல்கள் இவை கம்பன் கவி - என்று பெருமைக்குரியவை.

அரசன் உலகத்தின் உயிர்" என்பது புறநானூற்றும் புலவர் மோசி கீரனார் கருத்து.

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்பது அக்காலப் புலவர் பலர் இவ்வாறே கருதினர்.

"அரசன் உயிராகின் "உடலே" என்று மாற்றிப் புதுமை படைத்தது கம்பனின் புலமையே !

"உயிரெல்லாம் உறைவதோர் உடம்பும் ஆயினான் "

என்று மாற்றினார். "உடம்பு அழியும் உயிர் நிலையானது.
(அழிவதில்லை) அதனால் அவனை உயிர் என்றல் தவறு "என்பது கம்பரின் கூர்ந்த மதியின் வெளிப்பாடு.

மற்ற புலவர் சிந்திக்காததைச் சிந்தித்துப் புதுமை படைத்ததே கம்பரின் கவித்துவம்.

கைகேயி - "மன்னவன் கட்டளை" என்று இராமனிடம் கூறியது "பரதன் உலகாள - நீ சடைகள் தாங்கித் தவம் மேற் கொண்டு காட்டை அடைந்தும் புண்ணிய ஆறுகளில் நீராடிப் பதினான்காண்டுகள் முடிந்தபின் வருக என்பது அரசன் ஆணை " என்றாள்

அரச கட்டளை என்றுரைத்த கைகேயியைப் பார்த்துத் தாயே ! மன்னர் கட்டளையை நிறைவேற்றுவேன். மன்னரே சொல்லாவிடினும் தாங்கள் சொன்னாலும் செய்வேன் " என்றான் இங்கே ஒரு முடிச்சு.

"நீங்கள் கூறியது மன்னவன் கட்டளை அன்று உங்கள் முடிவ" என்னும் பொருளும் பாட்டில் புதைபொருளாயுள்ளது.

"மன்னவன் பணி அன்று - ஆகில் நும்பணி -எனினும் மறுப்பனோ?
என்று இப்படிப்பாடத் தெய்வக் கவிஞர்களால் மட்டுமே முடியும்/
கற்றோர் இதயம் களிக்கப் பாடியவன் கம்பன்.

படகில் கங்கையைக் கடக்கும்போது தன்தாயை (கைகேயியை)
குகப்பெருமானுக்கு பரதாழ்வான் அறிமுகப்படுத்துகிறான்.

"கழற்கால் மாயன் கொடுமையால் அன்று அளந்த

உலகை எல்லாம் இவள் தன் கொடுமையால் அளந்தவள்" என்று இங்கு உலகளந்த திருமாள் திறம் பேசப்பட்ட கருத்தென்ன ? மாவலியிடம் மூவடி நிலம் தானம் பெற்றுப்பின் உலகை எல்லாம் திருமால் தன் ஈரடியால் அளந்து - மற்றுமோர் அடிக்கு இடம் எங்கே ? என்று கேட்க மாவலி வாமனன் திருவடியில் தலை தாழ்ந்தான். திருமால் அவன் தலையில் கால் வைத்து அவனைப் பாதாள உலகில் அழுத்தி - அதற்குப் பேரர சாக்கினார். திருமால் திருவடி தலையில் பட்டதால் அவன் துறக்க இன்பம் பெற்றான்.

அவ்வாறே கைகேயின் செயல் கொடுமையாகத் தோன்றி டனும் அவள் செயலால் இராவண வதமும், இராம ராச்சியமும் கண்டனர் மக்கள்.

இவைகளை உணர்த்தவே "கழளகால் மாயன் நெடுமையால் அன்றிலிருந்து "செயலைக் குறிப்பால் காட்டிக் கைகேயியின் செயல் கொடுமையாகத் தோன்றிடினும் அது உலக நன்மைக்கே என்று உணர்த்தியது கம்பன் கவித்துவமன்றோ"

சொல்லின் செல்வனாகிய அனுமன் இராம இலக்குவரைப் பார்க்கிறான். அவர்களைப் பார்த்த அளவில் எடைபோட்டுவிடுகிறான்.

"சதமன் அஞ்சுறு ஆண்மை: தருமன் அஞ்சுறு நேர்மை : மதனன் அஞ்சுறு வடிவம் மறலி சுஞ்சுறு திறமை !"

சதமன் = சதமகன் என்ற தன் விகாசம் (இந்திரன்) நூறு அசுவமேத யாகங்கள் செய்தவனென்று பொருள்.

இந்திரன் அஞ்சத்தக்க காம்பீர்யம் உள்ளவர்கள். தருமதேவன் அஞ்சத்தக்க நல்லொழுக்க முள்ளவர்கள் மன்மதன் ஆஞ்சத்தக்க திருமேனி அழகுள்ளவர்கள். இயமனும் அஞ்சத்தக்க வல்லமை உள்ளவர்கள் இது சுருங்கச் சொல்லல் என்னும் அழகு இருநூறு வரிகளில் சொல்ல வேண்டிய செய்திகளை 2 அடியில் சொல்லியிருக்கிறான். இது கம்பன் கவித்துவம்.

இராவணன் எப்படிப் பட்ட மாவீரன் அவன் வீழ்ச்சியைக் கூறும் பாடல்களில் ஒன்று.

வீரத்தைக் களதிபோட்டு வெறுங்கையோடு மீண்டு போனான்" அவன் தலை கவிழ்ந்து சென்று காட்சியைக் கம்பன் "பூதலம் என்றும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கான் " என்றான். தன் மனைவியர் நோக்க -அவரைக்காண நாணி பூமி என்கிற மங்கையையே பார்த்துச் சென்றான்.

பெருவருத்தத்துடன் மலர்ப்படுக்கையில் படுத்துப் பெருமூச் செறித்தான்அவன் வருத்தம் - மற்றவர் சிரிப்பர் என்பது பற்றியதன்று.

வேல் நகு நெடுங்கண் செவ்வாய்

மெல்லியல் - மிதிலை வந்த

சானகி நகுவள் என்றே

நாணத்தால் சாம்புகின்றான் !

(நகுவள் = பரிகாசச் சிரிப்பு சாம்புதல் = வாடுதல்)

ஒரு பெண்ணுக்குத் துன்பம் தந்தவன் இரு பெண்கள் முன் அஞ்சி நாணித் தலை கவிழ்ந்து நின்றான். இவைகள் வைர வரிகள் கவித்துவம் இங்கே முடிசூடிக் கொள்கிறது. கம்பனுக்கு இணை கம்பன்தான். வான்மீகி முனிவரால் மனிதனாகக் காட்டப்பெற்ற இராமனை சமயம் நேரும்போதெல்லாம் கடவுளாகக் காட்டுவது கம்பன் கவித்துவம்.

இராமனிடம் நெடும்பகை பூண்ட இராவணன் வாயால் இராமனை "இவனேதான் அவ்வேத முதற்காரணன்" என்று பேசவைக்கிறான்.

கற்பரசி மண்டோதரி வாயால், இராமன்,

"ஆராவமுதாய் அலைகடலில் கண்துயிலும் நாராயணன்"

என்று கூறவைக்கிறான்.

இராமனைப் பகைவர் மனத்துக்கினியனாகச் செய்யும் ரசவாதம் கம்பனால் மட்டுமே முடியும் !

கம்பன் பாடல்களில் சொல்லுக்குச் சொல் ஒரு செய்தி மறைந்திருக்கும்.

கோசலையைச் சுற்றத்தாரும் தேவர்களும் தொழுது நிற்கின்றனர். சுற்றத்தார் என் தொழுகின்றனர் ?

"கோசலை ! இராமனைக் கானகம் செல்லாமல் தடுத்து நிறுத்த : இராமன் போனால் நாடு பொலிவிழந்து போகும், அதனால் போகவிடாதே" என்று கூறித் தொழுதனர். தேவர்கள் ஏன் தொழுதனர் ?

"தாயே ! எங்கள் இடுக்கண் தீர இராவணவதம் நடந்தாக வேண்டும். அதனால் இராமனைத் காட்டிற்கனுப்பு : நிறுத்தாதே" என்று தொழுதனர்.

இவ்வளவு செய்தியையும் " சுற்றத்தார் தேவரோடும் தொழ நின்ற கோசலை" என்ற ஓரடியில் புதை பொருளாக வைத்துள்ள கம்பன் உலக மாக்கவி என்று உரைத்தல் பொருத்தந்தானே !

ஓர் அறிஞர் எழுதினார்.

"கம்பனைப் பற்றிப் படிப்பதை விட்டு விட்டுக் கம்பனையே படியுங்கள்" என்று.

அப்படிப் படிப்பவர்களால் மட்டுமே கம்பன் கவித்துவத்தை உணர முடியும் !

முகவரி :

கலைமாமணி - பாவலர்மணி

"*சித்தன்*"

76, இலால் பகதூர் தெரு,

புதுவை - 605 001.

தொ.கி. (0413) 2222931

# இராமாயணத்தில் இராமாயண உவமைகள்

முனைவர் தெ. ஞானசுந்தரம்
சென்னை - 600 101.

**உவமைகளின் வளர்ச்சி**

கவிஞர்களின் சிறப்பு அவர்கள் கையாளும் உவமைகளால் வெளிப்படும். தொடக்கத்தில் உவமை. தெரியாத ஒன்றினைத் தெரிந்த ஒன்றுகொண்டு விளக்கும் கருவியாக அமைந்தது. அதனால் உவமையாகக் காட்டப்படும் பொருள்கள் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறியப்படும் பொருள்களாகவே அமைந்தன. 'தாமரை போன்ற கை' என்னும் போது தாமரை எல்லோரும் அறிந்தது. கையின் நிறம். மென்மை ஆகிய இயல்பை உணர்த்துவதற்கு அது பயன்பட்டது. இது முதல்நிலை.

அடுத்த நிலையில் உவமை கவிஞர்களின் புலமையைக் காட்டும் அலங்காரம் ஆயிற்று. அறிந்த பொருளை விளக்குவதற்கு அறியாத பொருளை உவமையாக்கினர். தாடகையின் மார்பில் தங்காமல் அம்பு ஊடுருவிச் சென்றது கண்ணால் காணக்கூடிய காட்சி கல்லாத புல்லர்க்குச் சொன்ன நல்ல பொருள் அவர் நெஞ்சில் தங்காது போதல் கண்ணால் காண முடியா காட்சி/ இவ்வுவமை பொருளை விளக்குவதற்காகப் பயன்படுத்தப்படவில்லை. ஒரு சிறந்த உண்மையைப் பதிவு செய்வதற்காகப் பயன்படுத்தப்படவில்லை. ஒரு சிறந்த உண்மையைப் பதிவு செய்வதற்காகச் பயன்படுத்தப்படவில்லை. ஒரு சிறந்த உண்மையைப் பதிவு செய்வதற்காகச் சொல்லப்பட்டுள்ளது. நுண்பொருள் பருப்பொருளுக்கு உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. இங்கு உவமை பாட்டிற்கு ஓர் அலங்காரமாகத் திகழ்கிறது. இஃது இரண்டாம் நிலை.

இத்தகைய நிலையினைச் சங்கப்பாடல்களில் காணமுடியவில்லை. இப்போக்கினைக் காப்பியங்களில் காணமுடிகிறது. கொடிய அரசனின் தீய ஆட்சி எப்பொழுது வீழும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் மக்களைப் போலக் கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் மூவரும் பகலவனின் மறைவுக்காகக் காத்துக்கொண்டிருந்தனர் என்னும் சிலப்பதிகார உவமையில் இத்தகைய நிலையினைக் காண்கிறோம்.

கொடுங்கோல் வேந்தன் குடிகள் போலப் படுகதிர் அமையம் பார்த்திருந் தோர்க்கு (புறஞ்சேரி 15-16)

இப்போக்கு சேக்கிழாரின் பெரிய புராணத்திலும், கம்பரின் இராமாயணத்திலும் செங்கோல் ஓச்சுவது காணலாம். ஐந்தெழுத்தினை அறியாதவர் மனம் போல உலகம் இருண்டது என்பர் சேக்கிழார்.

அஞ்செ முத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சம் என்ன இருண்டது நீண்டவான் (தடுத்தாட் 159)

போர்க்களத்தில் அரசன் மாள அவனைக் காப்பாற்ற முயலாமல் அஞ்சித் தப்பியவன் உற்ற பழிபோல இரவு படர்ந்தது என்பர் கம்பர்

அழிபோர் இறைவன் பட அஞ்சியவன்
பழிபோல வளர்ந்தது பாய் இருளே (1174)

இதற்கு அடுத்த நிலையில் உவமைகளை அமைக்கும் முறையில் கம்பரிடம் ஒரு புதிய போக்குக் காணப்படுகிறது. எந்தக் காப்பியத்தைப் பாடுகிறாரோ அந்தக் காப்பியத்தின் மாந்தர்களையும் நிகழ்ச்சிகளையும் உவமையாகக் கையாளுவதாகும்.

**கவிவெள்ளம்**

அயோத்தியை வளப்படுத்திய ஆறு சரயு. அது மலையில் தோன்றிப் பெருக்கெடுத்து ஓடிக் கீழே வருகிறது. அதன் வேகத்தில் மலைகளைப் பெயர்த்துக்கொண்டும் மரங்களைப் பறித்துக்கொண்டும். இலை. மலர் முதலான பொருள்களைச் சுமந்துகொண்டும் வருகிறது. அக்காட்சி எப்படி இருக்கிறது? இராமன் கடலைக் கடப்பதற்கு அணை அமைக்கப்பட்ட பொழுது மலையையும் பிறவற்றையும் ஏந்திக்கொண்டு சென்ற குரக்குச்சேனை போன்று இருந்ததாம். இது காப்பியத்தின் பிற்பகுதியில் பேசப்படும் நிகழ்ச்சி. இதனைக் கம்பர் உவமையாகக் காட்டுவது ஓர் உண்மையைப் புலப்படுத்துகிறது. கம்பர் தாம் பாடும் காப்பியக்கதை எல்லோருக்கும் தெரிந்த ஒன்று என்பதனை மனத்தில்கொண்டு அதனை எழுதுகிறார். அவர் நோக்கம் கதைமயைத் தெரிவிப்பதன்று. அதற்கும் மேலாகச் சில விழுப்பொருள்களை நயமாகத் தெரிவிக்க வேண்டும். என்பதுதான் என்பது விளங்குகிறது.

மலையெ டுத்து மரங்கள் பறித்துமாடு
இலைமு தல்பொருள் யாவையும் ஏந்தலால்
அலைக டல்தலை அன்று அணை வேண்டிய
நிலையு டைக்கவி நீத்தம் அந் நீத்தமே (20)

**சுடுசரம்**

சூர்ப்பணகை இராமன்பால் காமம் கொண்டாள். சூரியன் மறைந்தான். இரவு வந்தது. காமத்தீ பாம்பின் விடம் ஏறுவது போல ஏறியது. அத்தீயில் அவள் கருகினாள். மன்மதன் அம்புகள் அவள் மார்பில் பாய்ந்தன. அவள் அஞ்சினாள். உயிர் குலைந்து துடித்தாள். அந்த மன்மதன் அம்புகள் எப்படிப் பாய்ந்தன? தாடகையின் மார்பில் இராமன் செலுத்திய அம்புகள் போல் பாய்ந்தன. ஒரே வேற்றுமை. இராமன் அம்பினால் தாடகை வீழ்ந்தாள். மன்மதன் அம்பால் சூர்ப்பணகை வீழவில்லை. ஆனால் உயிர் நீங்கியது போன்ற துன்பத்தில் உழன்றாள். இதனை

தாட கைச்கொடி யாள்தட மார்பிடை

ஆட வர்க்கர சன்அயில் அம்புபோல்

பாட வத்தொழில் மன்மதன் பாய்கணை

ஓட உட்கி உயிர்உளைந் தாள் அரோ! (2804)

என்று தெரிவிக்கிறார் கம்பநாடர்

இதில் இராமன் வாழ்வின் முற்பகுதியில் நடந்ததாகத் தாம் தீட்டியுள்ள காப்பிய நிகழ்ச்சியையே கம்பநாடர் உவமையாக ஆண்டுள்ளார். இராமன் அம்பினை நிகர்த்தது மன்மதன் அம்பு என்று இராமன் அம்பினை உவமைப்படுத்துவது அதன் வலிமையை மீண்டும் நினைவூட்டுவதாக அமைந்ததுள்ளது.

**இராமசூரியன்**

அடுத்து இராமனைச் சூரியனுக்கு உவமையாகச் சொல்கிறார். இராமன் அரக்கர்களை அழித்துத் தேவர்களை வாழ்விக்கத் தோன்றியவன். அரக்கர்களாகிய இருளை ஒட்டுவதற்குப் பிறந்திருக்கும் சூரியன் அவன். இராமன்மீது கொண்ட காமத்தால் சூர்ப்பணகை இரவெல்லாம் துடித்தாள். அப்பொழுது இரவு அகலக் காலைப்பொழுது வந்தது. பகலவன் தோன்றினான். அதனைக் கற்பனைநயத்தோடு புனைந்துரைக்கிறார் கம்பநாடர். சூர்ப்பணகையின் காமம் பெருகிக் கொண்டிருக்கும் பொழுதில், மூன்று உலகங்களையும் மூடிக்கொணடிருக்கும் அரக்கர்களாகிய இருளை அழிப்பதற்கு இராமன் தோன்றியது போலச் சூரியன் தோன்றினான் என்கிறார். இதில் காப்பிய நாயகனையே சூரியனுக்கு உவமையாக்கியுள்ளார்.

ஆன்ற காதல் அஃதுஉற எய்துழி

மூன்று உலோகமும் மூடும் அரக்கராம்

ஏன்ற கார்இருள் நீங்க இராகவன்

தோன்றி னான்என. வெய்யவன் தோன்றினான் (2820)

**பரதனின் வருத்தம்**

இவ்வாறே இலக்குவன் நிலையினைப் பரதன் நிலையோடு ஒப்பிட்டுக்காட்டும் இடம் ஒன்றும் காப்பியத்தில் காணப்படுகிறது. இராமன் மாயமானைப் பிடிக்கச் சென்றான். அவன் அம்பு பட்டு வீழ்ந்த மாரீசன் இராமன் குரலில் அரற்றினான். அது கேட்டுச் சீதை பதறினாள். இலக்குவனை, இராமனைக் காப்பாற்றுவதற்குச் செல்ல வற்புறுத்தினாள்.

இலக்குவனுக்கோ அவளை தனியே விட்டுச் செல்ல மனமில்லை. அவன் இராமனுக்குத் தீங்கு ஏதும் நேரவில்லை என்று நம்பினான். சீதை அவன் செல்ல வில்லையென்றால் தான் தீயில் வீழ்ந்து இறக்கப் போவதாக மருட்டினாள். இலக்குவன் வேறு வழியின்றி அவளைத் தனியே விட்டு இராமனை நோக்கிச் சென்றான். அவன் செல்வது எப்படி இருந்தது? முன்னைய நிகழ்ச்சியினை நினைவூட்டி அதனை உவமையாக்குகிறார். பரதன்

சித்திரகூடத்தில் தங்கிய இராமனை அயோத்திக்கு அழைத்துச் செல்ல வந்தான். இராமன் இசையாததால் பிரிய மனமில்லாமல் அவன் கட்டளையை ஏற்று வருத்தத்தொடு பிரிந்து சென்றான். அதுபோல இலக்குவனும் சீதையைப் பிரிய மனமில்லாமல் அவள் கட்டளையால் வருத்தத்தோடு பிரிந்து சென்றானாம். இவ்வுவமையால் பரதன் உற்ற வருத்தத்தை மீண்டும் நினைவூட்டித் தம்பியர் இருவர் வருத்தத்தையும் ஒப்பிட்டுக் காணுமாறு செய்யும் கமபர் திறம் எண்ணி மகிழ்தற்குரியது.

ஒருமகள் தனிமையை உன்னி உள்உறும்
பருவரல் மீதிடப் பதைக்கும் நெஞ்சினான்
பெருமகள் தனைத்தனிப் பிரிந்து பேதுறும்
திருநகர்ச் செல்லும் அப் பரதன் செய்கையான் (3463)

தசரதன் துயரம்

இராமனும் இலக்குவனும் இளமைக்காலம் தொட்டு ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் வளர்ந்தவர்கள். பரதனும் சத்துருக்கனனும் எப்பொழுதும் இணைந்தே இருந்தனர். காப்பிய ஆசிரியர் பரதனும் சத்துருக்கனனும் இணைபிரியாமல் இருந்ததனை இராமனும் இலக்குவனும் போல் இணைந்து இருந்தனர் என்கிறார். 'எனையாள். வரதனும் இளவலும் என மருவினலே' (307) என்பது கம்பர் கூற்று. அப்படிப் பிரியாமல் எப்பொழுதும் உடனிருந்த இலக்குவன் இந்திரசித்தனோடு போரிடச் சென்றான். இராமன் வானவர் தலைவர்களோடு அவனைச் செல்லுமாறு பணித்தான். அவனும் இராமன் திருவடித்தாமரைகளை வணங்கிப் புறப்பட்டான். தன்னைவிட்டுப் பிரியாத தம்பி அப்பொழுது பிரிந்து செல்வது இராமனுக்கு உடலை விட்டு உயிர் பிரிவதுபோல இருந்ததாம். முன்பு விசுவாமித்திரன் வேள்வி காக்கத் தான் புறப்பட்ட போது தசரதன் எப்படித் துன்புற்றானோ அப்படித் துன்புற்றானாம். இதனால் முன்னைய நிகழ்ச்சியை நினைவூட்டுவதோடு இராமன் வருத்தமும் நன்கு உணர்த்தப்படுகிறது.

வான்பெரு வேள்வி காக்க
வளர்கின்ற பருவ நாளில்
தான்பிரிந்து ஏகக் கண்ட
தயரதன் தன்னை ஒத்தான்

இப்படிக் காப்பிய மாந்தர்களையும் நிக்கழ்ச்சிகளையும் உவமையாக்கும் போக்கு வேறு எந்தக் கவிஞரிடமும்காணப்படவில்லை. இது கம்பரின் தனிப்போக்கு. அவர்தம் தனிச்சிறப்புகளில் ஒன்றாகும்.

# பாதுகைகளைப் பூசிக்கும் இலங்கை பரதன்..

இராமபிரான் வனவாசம் சென்றபோது, அவனது பாதுகைகளை ஏந்திக் கொண்டு ஆட்சி பீடத்தில் வைத்தான் பரதன் என்று இராமாயணம் கூறுகிறது.

கம்பனில் ஆழ்ந்த தமிழப் பேராசிரியர் இராதகிருஷ்ணன், கம்பன் அடிப்பொடி எனப் போற்றப்பட்ட சா. கணேசன் ஆகியோரது காலணிகளைப் பக்தியுடன் பாதுகாத்துப் பூஜை செய்கிறார் கம்பனின் தொண்டர் ஒருவர்.

அவர் இலங்கையைச் சேர்ந்த தமிழர் ஜெயராஜ். தமிழ் அன்பர்களால்' கம்ப வாரிதி' என அழைக்கப்படுகிறார்.

கொழும்பிலும், யாழ்ப்பாணத்திலும் வெற்றிகரமாகக் கம்பன் கழகத்தை நடத்தி வருவதுடன் சுவிட்ஸர்லாந்திலும் கம்பன் கழகத்தைத் தொடங்கியுள்ளார்.

அண்மையில் சென்னை கம்பன் கழகம் நடத்திய விழாவில, பேராசியர் இராதாகிருஷ்ணன் விருது பெற்றார் அவர்.

"இளம் வயதில் திருச்சி வானொலியில் இராதாகிருஷ்ணனின் கம்பராமாயண உரையைப் பல முறை கேட்டு, காதல் கொண்டேன். அதுவே எனக்குக் கம்பன் மீது ஆர் வத்தைத் தூண்டியது.

இளைஞனாக இருந்தபோது, 'அய்யாவின்' (பேராசிரியர் இராதாகிருஷ்ணன்) பேச்சால் ஈர்க்கப்பட்டு, நானும் நண்பர்களும் சேர்ந்து 'கம்பன் கழகம்' தொடங்கினோம்.

1980-ல் எம்.ஜி.ஆர். மதுரையில் உலகத் தமிழ் மாநாட்டுக்கு ஏற்படடு செய்வதை அறிந்து, கம்பன் கழகம் சார்பில் பங்கேற்க அனுமதி கோரிக் கடிதம் எழுதினேன். கனவில்கூட நினைக்கவில்லை. பத்துப் பேர் பங்கேற்க அனுமதி கிடைத்தது. ஆனால், எங்கள் அமைப்பில் அப்போது பத்துப் பேர் கூட இல்லை" என்று சிரிக்கிறார்.

கப்பலில் மதுரை வந்தபோது, மாநாட்டின் இரணடாம் நாள் நிகழ்ச்சி நடைபெற்றது. மேடையில் பேசவும் அனுமதி கிடைத்தது. இலங்கை இனப் பிரச்சினையைத் தனது உரையில், ஜெயராஜ் குறிப்பிட, அதற்கு எம்.ஜி.ஆர். பதில் கூற பெரிய பரபரப்பே ஏற்பட்டுவிட்டது.

பின்னர் 'கம்பன் அடிப்பொடி' சா. கணேசனைச் சந்தித்தபோது, அவர மகிழ்ச்சி அடைந்தார். ஆனால், இராதாகிருஷண்னை அப்போது காணஇயலவில்லை.

மறுநாள், ராமேஸ்வரம் சென்று இலங்கைக்குக் கப்பலில் திரும்ப வேண்டும்.அதிர்ஷ்டமில்லை என்று நினைத்து, திருவானைக்காவில் நடந்து சென்றவருக்கு இன்ப அதிர்ச்சி.

ஒரு பள்ளிக்கூட வாயிலில் பேராசிரியர்இராதாகிருஷ்ணன் பேசுவார்' என்று போர்டில் எழுதப்பட்டிருந்ததைக் கண்டார்.

அந்நிகழ்ச்சியில் அவரைச் சந்தித்து, காலில் விழுந்து ஆசி பெற்றார். பிறகு, இலங்கை திரும்பிக் கடிதம் போட்டு, யாழ்ப்பாணக் கம்பன் கழக விழாவுக்குப் பேராசிரியரை அழைத்தார்.

இடையில், ஏப்ரல் மாதம் காரைக்குடியில் கம்பன் விழா ஏற்பாடாகியிருந்தது. ஜெயராஜுக்கு அழைப்பிதழ் வந்தது.

சா. கணேசன் கண்டிப்பானவர்.நேரம் தவறாமை அவருக்கு முக்கியம்.

ஒரு பேச்சாளரின் மகன் விபத்தில் சிக்கிக் கொண்டார். மிகுந்த தயக்கத்துடன் தன்னால் உரை நிகழ்த்த இயலவில்லை என்றார். அதை ஏற்ற சா. கணேசன், அருகில் இருந்த ஜெயராஜைப் பார்த்து, "தம்பி, நீ பேசறியா" என்றார். பொன்னான வாய்ப்பைப் பற்றிக்கொண்டார் அவர்.

பேச்சின் இறுதியில் ஜெயராஜ் விடுத்த வேண்டுகோள் சலசலப்பை ஏற்படுத்தியது.

"பேராசிரியர் ராதாகிருஷ்ணன் அய்யா, கம்பனடிப் பொடி ஆகியோரின் திருவடிகளைப்பெற்றுக் கொள்ள விழாவினர் உதவ வேண்டும்" என்றார்.

இதைக் கேட்ட சா. கணேசன் ஜெயராஜைக் கடிந்து கொண்டார். இறுதியில், நெகிழ்ந்து போய், காலணிகளைத் தந்தார்.

பேராசிரியருடன் நெருக்கம் அதிகரித்தது. அவரது வீட்டுப் பிள்ளையாகவே ஆகிவிட்டார். யாழ்ப்பாணத்தில் நடந்த கம்பன் விழாவில் மூன்று முறை பங்கேற்றார் இராதாகிருஷ்ணன்.

யாழ்ப்பாணத்தில் நல்லூர் கந்தசாமி கோயில் 8 கிரவுஉண்ட் நிலத்தில்தான் கம்பன் கோட்டம் கட்டப்பட்டது.

இருவரது காலணிகளைவும் கொழும்பில் உள்ள கம்பன் கழக மண்டபத்தில் தனி அறையில் வைத்து பூசித்து வருகிறார். ஜெயராஜ்.

"யாழ்பாணத்தில் கம்பன் விழாக்களின்போது, 'யுத்த காண்டம்' நடந்து கொண்டிருந்தது. பல சமயம் குண்டு மழைகளுக்கு இடையில் கம்பன் விழாக்கள் நடந்திருக்கின்றன" என்றார் அவர்.

பிறகு, 1997-ல் கொழும்பில் கம்பன் கழகம் அமைக்கப் பட்டது.

"கொழும்பில் ஒன்றே கால் கோடி ரூபாயில் 20 கிரவுண்ட் நிலம் வாங்கினோம். 2005-ல் கம்பன் மாநாடு ஏறபாடாகியிருக்கிறது. சர்வதேச அளவில் பெரிய ஆய்வு மாநாடாக ஒரு வாரம் வரை நடத்தத் திட்டமிட்டுள்ளோம்" என்றார் கம்ப வாரிதி ஜெயராஜ்.

**பா. கிருஷ்ணன்**

(நன்றி - *தினமணி*, கதிர்)
24-8-2003

**வேலூர் கம்பன் கழகத்தின் - 29-ம் ஆண்டு - கம்பன் விழாவில் 21-08-05 ஞாயிறு மாலை நடைபெற்ற கவியரங்க தலைமையேற்று "காவியக்கவிஞர்" கவிஞர் வாலி அவர்கள் வழங்கிய கவிதைகளை**

## தமிழ் வணக்கம்

வானத்தை விட
வயதான தமிழே! உனக்கொரு
வணக்கத்தை வைத்துவிட்டுப் பின்
வாயைத் திறந்தால் தான் ...
என்
வாய்க்கும் :
வண்ணக் கவிதை வாய்க்கும் !

உண்ணுதல் உன்றன் சோறு
உடுத்துதல் உன்றன் சோமன் ;
எண்ணுதல் உன்றன் எண்ணம்,
எழுதுதல் உன் எழுத்து,
பண்ணுதல் எதுவும் உன்றன்
பண்ணலே ! எங்கள் பெம்மான்
கண்ணுதல் தேவன் பெற்ற
கனகமே ! தமிழே ! போற்றி !

தமிழா !
தமிழா !
உனக்கும் ....
எனக்கும்...
தாயால் வந்தது யாக்கை ;
தமிழால் வந்தது வாழ்க்கை ;
எனவே
எஞ்ஞான்றும்...
தாயைத்
தமிழை
வாழ்த்தப் பழக்கிடு
வாக்கை வழங்கும் நாக்கை ;
அகரத் தமிழை ஆயுள் மூச்சாய்
நுகரச் சொல்லிடு மூக்கை ;

என்னணம்
ஆயின்
அறவே தவிர்க்கலாம்
அறியாமை என்றும் சீக்கை
நுண்மாண்
நுழைபுலத்தால்
அடையலாம் நீ
அரிமா நிகர்த்த நோக்கை !

✣ ✣ ✣ ✣ ✣

இதமிழ் - எமது
தமிழ் தமிழ் என்று தேகம்
குமிழ் அதன்
குண நலம் கூறி இன்று
அமிழ் - அதன்
அருட்புனலில் ஆடி நின்று
உமிழ் காறி
உமிழ் - கற்கண்டுத் தமிழால்...
உயர்விலை
உத்தியோகமிலை
எனச் சொன்னால்...
எவன சொன்னானோ அவன் முன்னால் !

✣ ✣ ✣ ✣ ✣

'எம்மொழி
செம்மொழி !'
என்று
எண்டிசை கேட்க மொழி ;
தகத்தகாயமான
தமிழ் ...
செம்பொன்
அம்பொன் ;
செப்பு பிறமொழி ;
செப்பு எனச் செப்பு !

இருந்தமிழ்;
அருந்தமிழ்;
தகவுகள் எம்மனோர்க்குத்
தருந்தமிழ் ;
பழமையான மொழி ஆனால்
கிழமையான மொழி அல்ல ;

சுந்தரம் பிள்ளை
சாட்சிக்கு வருவார், அதன்
சீரிளமைத் திறன்
செகத்திற்கு எடுத்துச் சொல்ல !

❖ ❖ ❖ ❖

அகவை
அதிகம்
ஆக . . .
ஆக . . .
மதுவும் மொழியும்
மேலும் மேலும் எண்ணிக்கும் ;
தமிழின்
திதிப்பைச்
சுட்டுவதற்குப் பஞ்சமா என்ன
சிந்துக்கும் கண்ணிக்கும் ?
நாட்பட்ட தமிழ் ; நன்கு
கோட்பட்ட தமிழ்
ஆழ்வாரும் நாயன்மாரும்
ஆட்பட்ட தமிழ் !
எங்கும்
எதிலும்
இன்தமிழை
இருக்கச் செய் ;
செய்வதை தாமதிக்காது
சுருக்கச் செய் !
சுருக்கச் செய்கையில் - பிறர் முகம்
சுருக்கச் செய்யாதே ; அது
கனன்று கடுத்து
கருக்கச் செய்யாதே !

எதைச் சொன்னாலும்
எதைச் செய்தாலும்
ஓம்புக நெறி
ஒதுக்குக வெறி !

## அவை வணக்கம்

காலூர் பொதும்பரும்
கலப்பையூர் பழனமும்
சேலூர் வாவியும் ;
சீருற விளங்குகின்ற
நாலூர் போலுரைக்க
வேலூர் பார்த்ததில்லை !
நானிலத்தின் கண்; ஆனால்
வேலூர் போலுரைக்க
வேலூர் பார்த்ததில்லை !

பாலூர் திருக்குறளைப்
பயில்வாரும்; பொற்சிலம்பு
காலூர் கற்பரசி
கண்ணகியைப் போற்றுவாரும் ;
மேலூர் விழைந்த மணி
மேகலையை விரும்புவாரும்
வேலூர் மாநகரில்
வெகுவாக வாழுகின்றார் !
முத்த மொழி; புகழ்
பூத்த மொழி ; புலவோர்
யாத்த மொழி ; புரவலர்
காத்த மொழி ; பூத்தமிழை..
மொழியாய் எண்ணாது - மூன்றாம்
விழியாய் எண்ணுகின்ற ...
வேலூர்
வாசிகளுக்கு
அன்பு மணக்கும்
அடியேனின் வணக்கம் !

## கம்பன் கழகத் தலைவருக்கு

வேலூர் கம்பன் கழகத்தின்
வேரே ! உன்
வேர்வை தான் அந்த
வேருக்கு நீரே !
என்
வணக்கத்திற்கும்
மரியாதைக்கும் உரியவனே !
அகவையிலும்
அறிவிலும் பெரியவனே !
ஒப்பரும் குணங்கள்
ஒருசேர -
அமையப் பெற்ற
அரியவனே !
அய்யா ! குப்புசாமி !
ஆர் உனக்கு ஒப்புசாமி ?
கம்பன் கழகம் - எனும்
நீராகாரத்திற்கு
நீதான் உப்புசாமி
உனைவாழ்த்தி - என்
உதடுகள் பாடாவிடில் தப்புசாமி,
உனைப்பாட - எனக்குள்
உண்டாவது ஒருவகை மப்புசாமி ;
என்பேச்சில்
ஏதேனும் பிழையிருந்தால் செப்பு சாமி !
கம்பன் பித்தனே !
கம்பன் பத்தனே !
சித்த
சுத்தனே ! முனிவர்
ஒத்த
முத்தனே ! என்
அத்தனே
அருட்சித்தனே !
வணங்கினேன் உன்னை ;
வாழ்த்துக என்னை !

## புதுவை முதல்வர்

மாண்புமிகு
முதல்வர் பெருந்தகையே !
கம்பன் கழகத்திற்குக் கிடைத்த பெருந்தொகையே !
'எங்க சாமியே !' என
ஏழைகள் ஏத்தும் ரங்கசாமியே !
வேதபுரி
வழங்கிய
வெளுப்புக் காமராசனே ! நீயுமந்தக்
கருப்புக் காமராசன்போல் - ஒரு
நெருப்புச் காமராசனே !
உன்னிடத்தில்
உள்ளது
ஊரவர்பால்
உள்ள ...
அக்கறை தவிர வேறு
எக்கறை ?
உன் உருவம் உயரம் ;
உன் உள்ளம் உயரம் ! உன்
உயரங்கள் துடைக்கின்றன
ஊரவர்தம் துயரம் !
எனக்கும்
எம்மனோர்க்கும் ....உவகை தருகிறது
உன் வருகை
எனவே கூப்புகிறேன்
என் இருகை !

## கம்பநாடனுக்குக்
## கை கூப்பு

கம்ப நாடா !
கம்ப நாடா !
கண்டேன் உன் கவிதையைக்
கம்பங்காடா ;
கண்டகணமே பாய்ந்தேன் நான்
காய்ந்த மாடா !

பாட்டை - சாப்
பாட்டைப் போல் சமைத்தவன் நீ ;
பாட்டை - கோட்
பாட்டை போல் அமைத்தவன் நீ ;
பாட்டை - பண்
பாட்டை போல் கொடுத்தவன் நீ ;
பாட்டை - வழி
பாட்டை போல் வகுத்தவன் நீ ;
பாட்டைப் - பயன்
பாட்டைக் கருதி எழுதும் ஏற்
பாட்டைச் செய்தவன் நீ ; ஏர்ப்
பாட்டையும் நெய்தவன் நீ ;
நன்றியோடு நினைக்கிறோம்
நாளும் நீ யாத்த பாட்டை ; ஏனெனில்
நாங்கள் பயணிக்க - அது
நீ போட்டுத் தந்த பாட்டை !
கம்ப நாடனே ! உனக்குக்
கதை தந்தவன் காட்டு வேடனே !
ஆனால்
அந்தக்
காட்டு வேடனையே வேட்டையாடிய
பாட்டு வேடன் நீ ;
நற்றமிழ்
நாட்டு வேடன் நீ !
ஆம் ; அவனது
ஆதி காவியத்தில் ...
ஒண்டமிழ் மரபுக்கு
ஒவ்வாது - என்றிருந்த
ஒன்றிரண்டை நீ ஒழுங்குபடுத்த
ஒவ்வாது ஆனது ஐவ்வாது !
உண்மையை
உரைக்கப் போனால்
உன் மூலம்
உயர்ந்தது மூலம் !
பற்பல திருத்தம் செய்தாய் ;
பாத்திரப் பொருத்தம் செய்தாய் ;
அற்புத அருத்தம் செய்தாய் ;

அதன்பின் விருத்தம் செய்தாய் !
பரவை சூழ் புவியே
பாராட்டும் தெய்வமாக் கவியே !
நீ
தமிழ் செய்த
தவம்
நீதான் ஆக்கினாய்
நற்றமிழை நவம் !
நீயா
பாற்கடல் நக்கப்
புகுந்த பூனை ?
அல்ல ;
அல்ல ; தமிழ்
நூற்கடல் மொத்தமும்
நொடியில் உறிஞ்சி
ஊர்க்கெலாம் உதவ
உமிழ்ந்த சோனை !
கால் கொண்டு நடந்த
கடவுளின் கதையை
சூல்கொண்ட மேகமாய்ச்
செய்யுளில் பெய்தாய் ;
நெறிகளில்
தறிகளின்
உவமைகள் ஊடாகப்
படிமங்கள் பாவாக
நற்கவி ஆடையை
நன்கு நெசவு செய்தாய் !

மகத்தானது உனது
மகத்துவம் ! அதனைக்
கூறக் கூடுமோ - எனது
கவித்துவம் ?
உப்புக் கடலின்
உள்ளீடெல்லாம் - ஒரு
செப்புக் குடமா
செப்பக் கூடும் ? நாகம்
காக்கும் மணியின்
கீர்த்தியை முழக்கி சிறு

நாக்குப் பூச்சியின்
நாக்கா பாடும் ?
திருப்பதிக் குடையின்
தெய் வீகத்தை - ஒரு
நாய்க்குடை கூறியா
நானிலம் அறியும் ? நிலத்தைப்
பேர்க்கும் ஈட்டியின்
பெருமை ஈதென ஓலை
ஈர்க்குப் பேசியா
ஊர்க்குப் புரியும் ?

நீ
சொல்லில் அடங்காத
சுந்தரக் கவி ; எமை
மயக்கி மல்லாத்தும்
மந்திரக் கவி !
உன்னில்
உள்ள
ஒன்பான் பண்புகளை
ஓத வருகிறார்
ஒன்பான் பாவலர்
ஒருவர் பின் ஒருவராக
முழங்க வகுபவர் - கவிஞர்
முத்து லிங்கம்
நாளும் என் நெஞ்சம்
நத்துலிங்கம் !
மேனாள் அரசவைக்கவிஞர் ;
மேலவை அங்கத்தினர் ;
முறையாய்
முத்தமிழ் படித்தவர் ;
முப்பது ஆண்டுகளுக்கு
முன்பே...
கொடம்பாக்கம்
கோட்டையைப் பிடித்தவர் !
அன்பரே ! வருக ! கம்பனில்
அன்பு பற்றி அருங்கவி தருக !
(திரு. முத்துலிங்கத்தை அழைத்தல்)

அடுத்து - கம்பனில்
அருள்பற்றிப் பாட வருபவர் ...
மாபெரும் புலவர்
ம.வே. பசுபதி
எம்மனோர்
எண்ணப்
பழனங்களில்
பாயும் பாட்டு நதி !
பசுபதி - எனைப்
பெறாத தாய் ;
அன்பு என்பால்
அறாத தாய் !
பசுபதியாரே ! வருக ! அருள்பற்றிப் பாட்டுத் தருக !
(திரு. பசுபதியை அழைத்தல்)

இன். கம்பனில்
சகோதரத்துவம் பற்றிச்
சாற்ற வருபவர் ...
பாவலர் மணி சித்தன் ; நான்
பணிந்தேத்தும் அத்தன் ;
முத்தமிழப் பித்தன் ; தாய்
முலைப்பால் போல் சுத்தன் !
சித்தரே ! வருக !
சிந்துகள் ! தருக !
(திரு. சித்தனை அழைத்தல் !)

பெண்ணியம் பற்றிப்
பாட வருபவர் ...
ஆண்டாள் அனைய
அறிவார்ந்த நங்கை ;
புதிதும் மரபும்
புனையவல்ல மங்கை ;
தமிழ் கங்கை
தமியேனின் தங்கை !
ஆண்டாள் பிரியதர்சினியே ! வருக !
அவைக்கு நின் பாடலைத் தருக !
(திருமதி. ஆண்டாளை அழைத்தல்)

இன் - கம்பனில்
தியாகம் பற்றித்
தீங்கவி தர வருபவர் ....
கூடல் நகரம் - பெற்ற
பாடல் நகரம்
புவி மெச்சும்
கவிச் சிகரம் ;
சொ. சொ. மீ.
சுந்தரனோரே வருக ! நின்
சருக்கரைப் பாடலைச்
சபைக்குத் தருக !
(திரு. சொ.சொ.மீ.சு அழைத்தல்)

கம்பனில்
கா ணும்..
தொண்டு பற்றித்
துலக்க வருபவர் ...
சுடர்மிகு கவிஞர் திரு.
சு. சுப்பிரமணி
செய்ய கவிதையால் தமிழ்த் தாய்க்குச்
செய்வார் அணி !
சுப்பிர மணியே ! வருக !
சுடர்மிகு கவிதை தருக !
(திரு. சு.சுப்பிரமணியை அழைத்தல்)

இன்- கம்பனில்
பேராண்மை பற்றி செல்வி
பே.அமுதா பாடுவார் !
கவிக்
குயிலே !
அரங்கம் மேவுக;
அழகாய்க் கூவுக !
(செல்வி. பே. அமுதாவை அழைத்தல்)

அடுத்து - கம்பனில்
மனித நேயம் பற்றி - திருமதி
மகாலட்சுமி அமர்நாத் பாடுவார் !
மகாலட்சுமியே !

மா றுக சரஸ்வ சரஸ்வதியாய் ;
மேடையில்
மிளிர்க சிந்து நதியால் !
(திருமதி மகாலட்சுமி அமர்நாத்தை அழைத்தல்)

அடுத்து கம்பனில்
நன்றி பற்றி
நற்கவி பாட வருகிறார்.
செல்வி
எம். ஐஸ்வர்யா ;
இளம் கவிதாயினியே !
இனிய சவிதா ! இனியே !
ஐஸ்வர்யாவே ! வருக ! கவிதை
ஐஸ்வர்யத்தை அனைவர்க்கும் தருக !
(செல்வி. ஐஸ்வர்யாவை அழைத்தல்)

முந்தாநாள்
முன்னிரவில
கம்பன் என்
கனவில் வந்தான் ;
கம்பன்
கழக
அழைப்பிதழ்
அட்டையில் இருப்பது போலவே ...
கண் ணுக்குக்
காட்சி தந்தான் !
அஞ்சலித் தேன் ; எனை
ஆசீர்வதித்து நின்றான் ; பிறகு
'அயோத்தி பிரச்சினை என்ன
ஆயிற் று ? என்றான் !
'நடந்து விட்டது சழக்கு ;
நடக்கின்றது வழக்கு ! என்றேன் ;
வம்பெதற்கு என் று சில
வார்த்தைகளைச் சொலா து மென்றேன் !
கம்பன் கிரித்தான் ; தன்
கருத்தை விரித்தான் !
நடையில் நின் றுயர்

நாயகனுக்கு நானும் கட்டினேன்
ஒரு கோயில்
உமிழ் நீர் ஊறும் என் வாயில் !
நாக்குதான்
நீளம்
தமிழ்தான்
தளம்
செங் கற்கள் - பொருள்
செறிந்த சொற்கள் ; அவை
சூளையில் வெந்தவை ! அல்ல, என்
மூளையில் வெந்தவை
கற்பனைதான் - என்
கொத்தனார் ; நல்ல
சிந்தனைதான் - என்
சித்தாள் !
ஆக
அவரவர்
அடிநாதான்
அயோத்தி ; அந்த
அயோத்தியை விட இந்த
அடிநா அயோத்தி அதி நேர்த்தி !
சண்டை பிடிக்கும்
சனங்களிடம் செல் ;
நான் சொன்னதாய் இந்த
நாக்கு சமாசாரத்தைச் சொல் !
மகாகவி கம்பன் - இப்படி
மொழிய
அடியேன் சொன்னேன் - கொஞ்சம்
அசடு வழிய !
'அய்யா' தாங்கள்
அறிவுறுத்தியபடி
அயோத்தியாய்
ஆக்கலாம் நாக்குகளை ;
ஆனால்
அரசியல் வாதிகள்
அனுமதிக்க மாட்டார்கள் ;
அது பாதிக்கும் வாக்குகளை ! '

என் உரைகேட்டு கம்பன்
உடனே சீறினான்
'நான் சொல்லும்
நயவுரை கேட்டால்
முடியாத வழக்கு முடியும் ;
விடியாத கிழக்கு விடியும் !
இவ்வாறு
இரைந்து கூறினான் !
சாதி ; சமயம்
மதம் ; மாச்சரியம் ;
இவை - இன்னமுமா
இருக்கின்றன ? ஆச்சரியம் !'
என்றான் ; வானம்
சென்றான் !
என் தூக்கம் கலைந்தது ; என்று
என் தேசத்தின் தூக்கம் கலையுமோ ?
இத்துடன்
நிறைவு பெறுகிறது கவியரங்கம் ; நற்றமிழாய் நிறைவுற்றிருக்கும்
செவியரங்கம் !
கம்பன் வாழ்க !
கம்பன் கழகம் வாழ்க !
அருந்தமிழை ஆதரிக்கும்
அன்பர் கூட்டம் வாழ்க !
கம்பர் பித்தன் வாழ்க
வணக்கம் !

## சர்வதேச கல்விக்கு வி.ஐ.டி-க்கு வாங்க !

அழகில்லாத பெண்கள் ;

அதிகாரமில்லாத போலீஸ் ; நீரில்லாத ஆறு ; மன்னன் இல்லாத கோட்டை ; விக்ரகம் இல்லாத கோயில் என்று 'இல்லாத' விஷயங்களுக்காகவே வேலூர் நகரம் பேசப்பட்டு வந்த காலம் போயே போச்!.

இது இது 'இருக்கிறது' என்று பேசவேண்டிய காலம் இது !

அப்படி ஒரு காலத்தை இழுத்துப் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறது வி.ஐ.டி !

வளர்ந்த நாடுகளின் அறிவோடும், தரத்தோடும் ஒரு தொழில்நுட்ப அதிசயத்தை நம்மூரில் நிகழ்த்த முடியுமா ? என்ற கேள்விக்கு பதில் இந்த வி.ஐ.டி !

அதாங்க, வேலூர் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜி !

டிஜிடலில் செதுக்கிய வி.ஐ.டி. என்னும் மூன்றெழுத்தை, தனது உயிரை உருக்கி உருவாக்கியவர் ஜி.வி. என்னும் இரண்டெழுத்துக்காரர். இவரது கிராஃபிக்ஸ் கனவுதான் இன்று வி.ஐ.டியாக வடிவெடுத் திருக்கிறது.

'ஜி.வி' என்று எல்லோராலும் அன்பொழுக அழைக்கப்படும் ஜி.விஸ்வநாதன் அவர்களுக்கு அறிமுகம் தேவையில்லை ; ஆனாலும் அவரைத் தனது 'வேந்தர்' என்று அங்குலம் அங்குலமாக அறிமுகம் செய்து கொண்டிருக்கிறது வி.ஐ.டி!

இந்த வி.ஐ.டி. ஒரு 30 லட்சம் சதுர அடிக் கடல் ! கல்விக்கடல் !!

இது ஒன்றும் தொடுவான தூரத்தில் இல்லை; கண்ணுக்கெட்டிய தூரம்தான். சென்னைக்கு மேற்கே 140 கி.மீ பெங்களூருக்குக் கிழக்கே 200 கி.மீ வேலூக்கு அருகே, காட்பாடி ரயில்வே நிலையத்திலிந்து சும்மா 3 கி.மீ.

அதனால்தான் இது, தொழில் நுட்பக் கல்வி பயில விரும்பும் மாணவர்களின் திருத்தலமாக மாறியிருக்கிறது வெளிநாட்டு மாணவர்களும் கூட, பறவைகளாக வந்து தொழில் நுட்பக் கல்வி பயின்று செல்லும் வேடந் தாங்கலாக ஆகியிருக்கிறது;

அது எப்படி ?

ஒரு ஃபிளாஷ்பேக்

1980 ஆம் ஆண்டு முதல்வர் எம்.ஜி.ஆரிடம் ஜி. விஸ்வநாதன் மெதுவாக ஒரு கோரிக்கை வைக்கிறார்.

"பின்தங்கிய மாவட்டமான எங்களது வேலூரில், அரசு ஒரு இன்ஜினீயரிங் கல்லூரி தொடங்க வேண்டும்". அவரைக் கூர்ந்து கவனித்த எம்.ஜி.ஆர்., "அரசே தொடங்குகிற நிலைமையில்லை. ஆனாலும், காலத்தின் தேவை கருதி, மாவட்டத் தலைநகர்களில் தனியார் இன்ஜினீயரிங் கல்லூரிகள் தொடங்க அனுமதிக்கலாமென்று நினைக்கிறேன். எதற்கும் ஒரு டிரஸ்ட் தொடங்கி, வங்கியில் பணம் போட்டு வை" என்கிறார்.

வியப்பில் ஆழ்ந்த ஜி. விஸ்வநாதன் அதன்படி 1984ல் ஆரம்பித்தது "வேலூர் இன்ஜினீயரிங் காலேஜ்". அதுதான் இப்போது வி.ஐ.டி!

ஆரம்பத்தில் சிவில் இன்ஜினீயரிங், மெக்கானிக்கல் இன்ஜினீயரிங் மற்றும் இசிஇ வகுப்புகள்தான் ! கொஞ்சம் கொஞ்சமாக, மேலும் மேலும் வகுப்புகள் இணைக்கப்பட, பட்ட மேற்படிப்புகள் 1994ல் சேர்க்கப்பட்டன.

தற்போது 16 இளநிலை பட்டப்படிப்புகள், 26க்கும் மேற்பட்ட மேற்படிப்புகள்!

வாவ்! என்று உதடுகள் பிரியும். கண்கள் விரியும். வி.ஐ.டியின் 6 பட்டப்படிப்புகளும், 17 பட்ட மேற்படிப்புகளும் பிரிட்டன் நாட்டின் இன்ஸ்டிடியூட் ஆஃப் எலக்ட்ரிகல் இன்ஜினீயர்ஸ் எனும் அமைப்பின் தகுதிச் சான்றிதழ் பெற்றுள்ளன என்றால், மயக்கம் போட்டு விழுந்து விட வேண்டாம்.

இன்னும் கேளுங்கள், இந்தியாவில் உள்ள பல்கலைக்கழகங்களிலேயே சர்வதேச அங்கீகாரம் பெற்ற முதல் இந்திய நிகர்நிலைப் பல்கலைக் கழகம் வி.ஐ.டி. தான்!

ஜி. விஸ்வநாதனின் நன்றியுணர்ச்சியைப் பறைசாற்றியபடி, மைய மண்டபத்தில் உள்ள மார்பளவு எம்.ஜி.ஆர் சிலையைக் கடந்து, டிஎஸ். சந்தானம் பெயர் தாங்கியுள்ள கம்ப்யூடிங் சென்டர் சென்றோம்.

தேன் கூடுகள் மாதிரியிருந்த 250 சிஸ்டத்தையும் மாணவ மாணவியர் மொய்த்திருக்கின்றனர்.

அவர்களின் செயல்பாடுகளைக் கவனித்துக் கொள்ள காமிராக்கள் பொருத்தப்பட்டுள்ளன. செல்போன் அனுமதி இல்லை. டுவீலரில் வருவோர் ஹெல்மெட் அணிந்துதான் வர வேண்டும் என்பன

மாணவர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் கட்டுப்பாடுகள். வேறு ஏதுமில்லை.

"இங்குள்ள எல்லா படிப்புகளுக்கும் வளைந்து கொடுக்கும் மதிப்பீட்டு முறை உள்ளது. மாணவர்கள் தங்களது தேவைகள், விருப்பங்களைப் பொறுத்து பாடங்களைத் தேர்வு செய்து கொள்ளலாம்.

பி.டெக். படித்துக் கொண்டிருக்கும் மாணவர், அதே சமயத்தில் முதலாண்டு எம்.பி.ஏ. முடித்துக் கொள்ளலாம். பின்னர் ஓராண்டு எம்.பி.ஏ. முடித்து பி.டெக் மற்றும் எம்.பி.ஏ ஆகிய இரட்டைப்பட்டமும் பெற்றுக் கொள்ளலாம்" என்கிறார் ஜி. விஸ்வநாதன்.

இங்குள்ள மேனேஜ்மெண்ட் சயின்ஸ் பிரிவு, எதிர்காலத்திசைகாட்டி! இதில் வெப் மாஸ்டர் ஸ்மார்ட் பேனல் போர்டு என்ற நவீன சாதனம், அத்தனை விஷயங்களையும் கம்ப்யூட்டர் மெமரியில் பதிவு செய்து கொள்கிறது. டி.வி.டி, ஓ.எச்.பி. போன்றவற்றிலிருந்து தகவல்களைப் பெற்று திரையிடக்கூடிய வசதிகளும் இங்குண்டு.

அடுத்து வி.ஐ.டி.யின் நூலகம்! ஷங்கர் படத்து ஷாட்டாக விரிந்து கிடக்கிறது. அந்த 54,000 சதுர அடி அறிவுச் சுரங்கம்! நம்ம வீட்டு முற்றத்தில் முளைத்திருக்கும் துளசிச்செடி போல புத்தங்கள் எல்லாம் மணக்கின்றன.

பன்னாடுகளிலும் பிரசுரமாகும் 80,000/- நூல்கள் இங்கே சங்கமிக்கின்றன. தவிர 4500 ஆன் -லைன் இதழ்கள், மற்றும் 600க்கும் மேற்பட்ட பதிப்பு இதழ்கள்! அதற்கான ஆண்டுச் சந்தா மட்டும் ரூ.85 லட்சமாம்! அவற்றை வாசிக்க 100 சிஸ்டம் ! ஆனால் பி கேர்புல் ! வாசலில் அலாரம் சிஸ்டம் ! கவனக் குறைவாக ஒரு புத்தகத்தை சுருட்டிச் சென்றால்கூட 'பைக்!' ஆனால், இங்கு பயில்வோர் உன்னத மானவர்கள்: உன்னத மாணவர்கள்!

"வி.ஐ.டி.யில் தொழில்நுட்பக் கல்வி பெறுவது வசதியான ஜீன்ஸ் போட்ட மாதிரி இருக்கிறது" என்கிறார்கள் மாணவர்கள். மாணவிகள் இங்குள்ள கோச்சிங்கை மிகவும் மெச்சுகிறார்கள். "புரொஃபஸர்ஸ் புரொஃபஷனலாக இருக்கிறார்கள்" என்கிறார் அமெரிக்காவிலிருந்து இங்கு வந்து பயிலும் மேரி பெல்.

எந்த ஒரு பாடத்தில் சந்தேகம் ஏற்பட்டாலும் அதில் வித்தகர்களான வெளிநாட்டுப் பேராசிரியர்களுடன் பேசித் தெளிவுபெற வீடியோ கான்ஃபரன்ஸ் வசதி செய்யப்பட்டுள்ளது.

'ஆஸ்திரேலியா, ஜெர்மனி, சுவிட்சர்லாந்து போன்ற பன்னாட்டு பேராசிரியர்களும், வி.ஐ.டி. மாணவர்களுக்குப் பாடம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது' என்கிறார் புரோசான்சலர் ஜி.வி. சம்பத். எப்படி ? அவர்கள் நாட்டிலிருந்தே, வீடியோ கான்பரன்ஸ் மூலம்தான் ! அவர் பிரமிக்காமல் சொல்கிறார். நமக்கு பிரமிப்பாக இருக்கிறது !

அவர்களை வரவழைத்துப் பயிற்சிப் பட்டறையும் நடத்துகிறது வி.ஐ.டி. அதற்கான ஆடிட்டோரியங்கள் தோட்டாதரணி செட் மாதிரி க்யூட்டாக இருக்கின்றன !

'பல்வேறு திசையிலிருந்தும் கல்வி ஆலோசனைகளை 'எடுசாட்' எனப்படும் செயற்கைக்கோள் மூலமாகப்பெற அண்ணா பல்கலைக்கழகம் மூலம் பெறப்பட்டுள்ளது' என்கிறார் மற்றொரு புரோ - சான்சலர் ஜி. சங்கர் விஸ்வநாதன். இரு இணைவேந்தர்களுமே, ஜி.விஸ்வநாதனின் புதல்வர்கள் !

கல்வி வழங்குவதோடு, வேலை வாய்ப்பும் வழங்குகிறது. வி.ஐ.டி ! இது வரை சுமார் 95 சதவீத மாணவர்களுக்கு வேலை பெற்றுத் தந்திருக்கும் வி.ஐ.டி, இனி 100 சதவீத வேலை வாய்ப்புக்கு உத்திரவாதம் வழங்குகிறது. அதற்கான கேம்பஸ் இன்டர் வியூவிற்கு நூற்றுக்கும் மேற்பட்ட தொழில் நிறுவனங்களை அழைத்து வரும் அதன் ஆற்றல் மெச்சத்தக்கது!

கல்வி எனும் சரக்கு உலக மயமாகியிருக்கும் சூழலில், வி.ஐ.டி.யும் ஜி.விஸ்வநாதனும் லாபம் தரும் வியாபாரமாக அதைப் பார்க்கவில்லை.

அதற்கு உதாரணம், வருடத்திற்கு 73 இலட்ச ரூபாய் இலவச கல்வி உதவித் தொகையாக தகுதிவாய்ந்த வி.ஐ.டி. மாணவர்களுக்கு நிர்வாகம் வழங்குவதும், வி.ஐ.டி.யின் நுழைவுத்தேர்வில் முதல் 50 இடம் பிடிக்போருக்கு, அனுமதிக் கட்டணத்திலிருந்து 25,000 ரூபாய் தள்ளுபடி வழங்கப்படுவதும், எம்.பி.ஏ., எம்.டெக். மாணவர்களுக்கு குறைந்த விலையில் லேப்-டாப் வழங்கப்படுவதும்!

சுற்றுச்சூழல் குறித்த விழிப்புணர்வு வி.ஐ.டி.க்கு அதிகமாகவே உள்ளது! கழிவு நீரை வெளியேற்றி, சுற்றுச் சூழலுக்கு மாசு ஏற்படுத்தாமல், அந்த நீரை சுத்திகரித்து புல்வெளிகளுக்கு பாய்ச்சுகிறார்கள். அதனால் எக்ஸ்னோரா கிரீன் கேம்பஸ் விருது பெற்றிருக்கிறது. வி.ஐ.டி. இதன் வளாகத்தில் பயன்படுத்தப்படும் குடிதண்ணீர் சுத்தமும், சுவையுமானது!

உயிரி எரிபொருள் மற்றும் சூரிய ஒளியைப் பயன்படுத்தி மின் சக்தி உற்பத்தி செய்யப்படுவதும், அதனைக்கொண்டே பல்கலைக்கழக வளாகத்தின் மின்சக்தித் தேவையைப் பூர்த்தி செய்து கொள்வதும் உன்னதமான விஷயங்கள்.

வி.ஐ.டி.யின் மாணவர் தங்கும் விடுதிகள், சுகம் தங்கும் விடுதிகள்! எல்லா விடுதிகளும் ஏ.சி! இங்கு படிக்கும் மாணவர்கள் சுமார் 10,000 பேரில் 60 சதவீதம் பேர் ஹாஸ்டல்வாசிகள்தான்!

ஜான் எஃப் கென்னடி, அன்னை தெரஸா, இந்திராகாந்தி, கல்பனா சாவ்லா போன்ற புகழ்மிக்கோரின் பெயர்களே 11 விடுதிகளுக்கும் சூட்டப்பட்டுள்ளன. ஒருவர், இருவர், மூவர் என விரும்பியவாறு தங்கிக்கொள்ள விதவிதமான அறைகள் ஜஸ்பார்களாக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன.

படிப்பு மட்டும் போதுமா? சி.டி. இருந்தால் தானே 'ரைட்' பண்ண முடியும்? மாணவர்கள் தமது உடல்தகுதியை முறையாக வைத்துக் கொள்ள, குளிர்சாதன வசதி செய்யப்பட்ட 4 உடற்பயிற்சிக் கூடங்கள் உள்ளன. சும்மா செஞ்சுகிட்டே இருக்கலாம்!

தடகள வீரர்களுக்கு 400 மீட்டர், 200 மீட்டர் ஓடுகளங்கள் உள்ளன. சும்மா ஓடிக்கிட்டே இருக்கலாம்! 2 கால்பந்தாட்ட மைதானங்கள், 6 கூடைப்பந்து தளங்கள், 11 பூப்பந்தாட்ட களம், கிரிக்கெட் மைதானமும் உள்ளன.

நீச்சல் பயிற்சியில் ஆர்வமா? உலகத் தரம் வாய்ந்த நீச்சல் குளமும் இருக்குதுங்கோ!

ஹாயாக உட்கார்ந்து ரசித்தும் ருசித்தும் சாப்பிட தங்கத்தீவு மாதிரி 'ஃபுட்கோர்ட்' ஒன்று உள்ளது. 'இங்கு சிறந்தது வெஜ்ஜா, நான்-வெஜ்ஜா? வாதப்பிரதிவாதம் செய்ய ஆரம்பித்தால், நீதிபதி பாடு திண்டாட்டம்தான்! வெளிநாடுகளில் இருந்தெல்லாம், மாணவர்கள் வந்து ஹாஸ்டலில் தங்கியிருப்பதால் அவர்தம் சுகாதாரத்தின்மேல் அதிக அக்கறை எடுத்துக்கொண்டிருக்கிறது வி.ஐ.டி! எனவே, ஒரு ஹெல்த் சென்டர்! முழுநேர மருத்துவர் 6 பேரும், செவிலியரும் இருக்கின்றனர். ஈ.சி.ஜி. போன்ற எல்லா வசதிகளுகம் உள்ளன.

"ஒரு கல்வி நிறுவனம் என்கிற வகையில் கல்வி கற்றுத் தருவதோடு நிற்பது எங்களது நோக்கம் இல்லை; தமது சிந்தனைகளுக்கும், கற்பனைகளுக்கும் செயலாக்கம் தரவிரும்பும் ஆய்வாளர்களையும் ஊக்குவிக்கிறோம்" என்கிறார் ஜி.விஸ்வநாதன்.

ஆட்டோமோடிவ் எலெக்ட்ரானிக்ஸ், பயோ இன்ஜினீயரிங், பயோ செபரேஷன், தகவல் தொழில்நுட்பம் மற்றும் மெட்டீரியல் இன்ஜினீயரிங் ஆகிய துறைகளில் ஆராய்ச்சிகள் நடத்த முன்முயற்சி எடுத்து வருகிறது.மேலும், இந்திய அரசின் ஒத்துழைப்போடு 'டெக்னாலஜி பிஸினஸ் இன்கு பேட்டர்' எனும் திட்டத்தின் மூலம், தொழில் முனைவோர்களை அடைகாக்கும் மையமாகவும் இயங்குகிறது வி.ஐ.டி!

உதாரணமாக, ஆட்டோ மொபைல்ஸ் துறையில் புதுப்புது பாகங்கள் பற்றிய தமது ஐடியாவை தொழில் முனைவோர் வரைந்து தந்தால், அதனை அந்தப் பொருளாகவே வடிவமைத்துத் தருகிறது இந்த இன்குபேட்டர் !

மேலும் பார்ட்டிகளுடன் தொழில் முனைவோர் விவாதிக்கவும், ஆய்வுகள் மேற்கொள்ளவும் இடவசதி செய்துதருகிறது. தம்முடன் ஒப்பந்தத்தில் உள்ள, தொழிலகங்களுக்கு இவர்களை அறிமுகப்படுத்தி, அவர்களுக்கு ஒரு வாய்ப்பும் ஏற்படுத்தித் தருகிறது.

"இதுமாதிரியான செயல்பாடுகளின்மூலம், அடுத்த 5 ஆண்டுகளுக்குள் உலகின் முதல்தர பல்கலைக்கழகமாக வி.ஐ.டி.யைக் கொண்டுவந்து விடுவோம்" என்கிறார் ஜி. விஸ்வநாதன்!

கனவு காண்பவர்கள்தான் சாதிக்கிறார்கள்!

(நன்றி : குங்குமம்)



**வேலூர் கம்பன் கழகத்திற்கு - தங்கள் கொடைத் திறத்தால்**
**ஆண்டு தோறும் நன்கொடையளித்து, உறுதுணையாய்**
**கழகத்தின் காப்பாளர்களாக இருந்துவரும் புரவலர் பெருமக்கள்**

தவத்திரு. தமிழத்திரு சிவத்திரு அருள் திரு. பாலமுருகனடிமை சுவாமிகள்

தவத்திரு. கலவை சச்சிதானந்த சுவாமிகள்

" D. புருஷோத்தம முதலியார்
திருக்குறள் நம்பி ஊ.வ.தட்சிணாமூர்த்தி முதலியார் நினைவாக

" A.S.A. பரமசிவம்
அமரர். A.S. அருணாசலம் பிள்ளை நினைவாக

" N. கோதண்டபாணி முதலியார்
அமரர். N. ராதாகிருஷ்ணன் நினைவாக

" C.K.D. திருநாராயணன் & பிரதர்ஸ், திருப்பத்தூர்.

" J.A. நிஸார் அலி, வேலூர் சில்க் ஹவுஸ்

" Rtn. PHF. P.P. V.T. மோகன சுந்தரம்

" V.T. ராஜசேகரன்

" Rtn. PP. ஆடிட்டர் K. பாண்டியன்

" C. சங்கர், F.C.A. திருமதி. காயத்ரி தேவி F.C.A.

" Ln. M. வெங்கிட சுப்பு

" Ln. V.S. ரமேஷ்குமார்

" டாக்டர். T. குமரகுரு

" R. ஜெயராமன்

" S.M. சுந்தரம்

" கவிஞர். கோ. இருசன்

" T.K.B. சுந்தரம், T.K.B. டிரான்ஸ்போர்ட்

" J. தர்மலிங்கம், J.D.L. பஸ் சர்வீஸ்
வேலூர் மாவட்ட லாரி உரிமையாளர்கள் சங்கம் சார்பில்

" A. சுப்பிரமணி, கலைமகள் டிரான்ஸ்போர்ட்
வேலூர் மாவட்ட பேருந்து உரிமையாளர்கள் சங்கம் சார்பில்

M/s வேலூர் மகாராஜா சிட்பண்ட்ஸ்

" வேலூர் ராஜலட்சுமி சிட்பண்ட்ஸ் குரூப்

" வேலூர் சக்தி கணபதி பைனான்ஸ் குரூப்

M/s வேலூர் நேதாஜி மார்க்கெட் காய்கறி வியாபாரிகள் சங்கம்

சீர்மிகு Ln. R. லோகநாதன்

" கவிஞர். ச. இலக்குமதி

" S. கோதண்டராமன், S.K.R.

" W.G.S. ராமச்சந்திரன்

" V.V. Enterprises T.M. குமார்

" ஆரணி சேவூர். T. முனுசாமி செட்டியார்

" Rtn. PP. V. கிருஷ்ணன், F.C.A.

" R. செல்வநம்பி, F.C.A.

" பேராசிரியர் தேசியா K. மோகன்

" பாரத் மெட்ரிக் பள்ளி இந்திரநாத்

மற்றும் தேவி ஆட்டோ ஸ்டோர்ஸ் V. தேவராஜ்

V. மோகன்

" ஆடிட்டர் D. நிர்மல்குமார்

" சிருஷ்டி T. ராஜேந்திரன்

" V. சோலைநாதன்

" தெ. சமரசம்

நன்கொடை ரசீதுகள் மூலம் வசூலித்து உதவிபுரியும் ஆதரவாளர்கள்

சீர்மிகு J. ஜோதி ஏகாம்பரம், பள்ளிகொண்டா

" A.N. பூங்காவனம், ஆர்க்காடு

" இரா. இராதாகிருஷ்ணன், ஆர்க்காடு

" M. பர்வதராஜன், சத்துவாச்சாரி, வேலூர்.

" V.L. சச்சிதானந்தம், காந்திநகர். முத்தமிழ் மன்றம்.

நிகழ்ச்சிகள் நன்கொடை - Sponsorship மூலம்

பாரத ஸ்டேட் வங்கி

இந்தியன் ஓவர்சீஸ் வங்கி

ஆயுள் கழகம்

**அருள் உள்ளம் படைத்த புரவலர் பெருமக்களுக்கும் - சான்றோர்களுக்கும்**
**கம்பரசிகர்களுக்கும், இலக்கிய சுவைஞர்களுக்கும்**
**ஓர் பணிவன்பான வேண்டுகோள்**

**விண்ணப்பம்**

பேரன்புடையீர் ! வணக்கம் பல.

வேலூர் கம்பன் கழகம், கடந்த இருபத்தொன்பது ஆண்டுகளாக சிறப்பாக பணியாற்றி கம்பன் புகழ்பாடி, கன்னித் தமிழ் வளர்த்து கம்பராமாயணத்தின் சிறப்பை தனித்தன்மையினை, உயர்வினை பலகோணங்களில் எடுத்துக்காட்டி மக்களிடையே சீரிய தமிழ்ப்பணியினையும், அறநெறிப் பணியினையும் புரிந்து வருதலை தாங்கள் யாவரும் அறிவீர்கள்.

ஆண்டுதோறும் ஆகஸ்ட் திங்கள் மூன்றாம் வாரம் மூன்று நாட்கள் வெள்ளி, சனி, ஞாயிறு கிழமைகளில் கம்பன் விழா நடத்தப் பெறுகிறது. இதுவரை நடைபெற்ற கம்பன் விழாக்கள் தமிழகத்தில் இயங்கி வரும் பல ஊர்களின் கழகங்களிடையே ஒரு தனிச் சிறப்போடு யாவரும் ஏகோபித்து பாராட்டும்வண்ணம் அமோகமான பாராட்டுக்களுடன் திகழ்வதை பெருமிதத்துடன் பணிவுடன் தங்களின் மேலான கவனத்திற்கு சமர்ப்பிக்கிறோம்.
வேலூரில் நடைபெறும் சித்திரை பௌர்ணமி விழாப் போன்று வேலூருக்கு பெருமை சேர்த்திடும் வகையில் கழகம் செயல்பட்டு வருகிறது. கழகத்தின் தோற்றம் - செயல்பாடு குறித்து தனியாக கட்டுரை ஒன்றும் இம் மலரில் காணப்பெறலாம்.

ஆண்டுக்கு ஆண்டு விழாச் செலவுகள் கூடிக் கொண்டே போகின்றன அன்பர்களிடம் இருந்து கிடைக்கப்பெறும் நன்கொடைகளோடு, பாரத ஸ்டேட் வங்கி, இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, ஆயுள் காப்பீட்டு கழகம் ஆகிய பொது நிறுவனங்களின் sponsorship மூலம் நிகழ்வுகள் கொடை மூலம் கிடைக்கப் பெறும் துகையோடு ஓரளவுக்கு மிகுந்த சிரமத்துடனேயே விழாவினை நடத்தி வருகிறோம்.

ஆண்டுதோறும் பற்றாக்குறையாக விழா வரவு செலவு பட்ஜட் துண்டு விழும் வகையிலேயே நடந்துக் கொண்டு வருகிறது.

இப்போது எனக்கு 80 அகவையாகிறது, எனது காலத்திற்கு பிறகும் வேலூரில் கம்பன் விழா தொடர்ந்து நடைபெற வேண்டும் என்கிற ஏக்கமும் தாபமும் அளவு கடந்து மேலிட்டு, சிந்தனையோடு சஞ்சலப்பட்டு வருகிறேன். வேலூர் கம்பன் கழகத்திற்கென ஒரு அறக்கட்டளை வேலூர் கம்பன் அறநிலை Vellore Kamban Trust என ஒன்றினை ஏற்படுத்தி அதனை தக்க பொறுப்புள்ள குழுவிடம் ஒப்படைத்து எனது இறுதி மூச்சு முடிய வேண்டுமெனப் பெரிதும் விரும்புகிறேன்.

ஆயுள் உறுப்பினராக கட்டணம் ரூபாய் ஆயிரம் செலுத்தி கழகத்தில் தங்களை இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன் வேலூர் கம்பன் கழகத்தின் ஆயுள் உறுப்பினர்களாக இரண்டு நூறு உறுப்பினர்களாவது சேருதல் வேண்டும் என்பது குறிக்கோள் லட்சியம்.

இருநூறு உறுப்பினர்கள் ஆயுள் கட்டணம் வாயிலாக ரூபாய் இரண்டு லட்சமும், புரவலர்களின் மூலம் நன்கொடையாக ரூபாய் மூன்று லட்சமும் ஆககூடி ரூபாய் ஐந்து லட்சத்துடன் கம்பன் அறநிலை - டிரஸ்ட் நிலை பெற வேண்டும். எனப் பெரிதும் விழைகிறேன்.

அன்பர்கள் தாங்கள் ஆயுள் உறுப்பினர்களாக சேர்வதோடு மட்டுமின்றி இலக்கிய சுவைஞர்களை நண்பர்களையும் உறுப்பினராக சேர்த்திடுமாறு பணிவன்புடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறை
தெய்வத்துள் வைக்கப்படும்

எனும் குறளுக்கு இலக்கியமாக வாழ்வியல் நெறியினை தனி மனித ஒழுக்கத்தின் மேன்மையினை மானுடத்தின் சிறப்பினை மனித நேய கோட்பாட்டினை நமக்கெல்லாம் வழங்கிடும் கம்பன் காப்பியம் முழுவதுமாக முற்றிலுமாக உட்பொருளோடு ஆழமாக புதிய கோணங்களில் புதிய பார்வையில் புதிய சிந்தனைத் தெளிவில் பரவிட

கம்பன் கழகம் நின்று செயல்பட பேருதவிப் புரிவீர்
அன்பர்கள் தாமே ஆயுள் உறுப்பினராகலாம்
மற்றவர்களை உறுப்பினராக சேர்ப்பித்திடலாம்
நன்கொடைகள் தாராளமாக வழங்கிடலாம்
நன்கொடைகள் கிடைத்திட வழிவகை செய்யலாம்

ஏற்றதை செய்திடுக எங்கள் லட்சியம் பூர்த்தியாக பக்கபலமாக செயல்பட முன் வாரீர் வாரீர் வாரீர் என வேண்டுகோள் விடுக்கிறேன்.

இங்ஙனம்
கம்பர் பித்தன் S.N. குப்புசாமி முதலியார்
தலைவர்

கம்பன் வாழ்க கம்பன் புகழ் வாழ்க கன்னித் தமிழ் வாழ்க

# வேலூர் கம்பன் கழகம்

| | | |
|---|---|---|
| புரவலர்கள் | : | தவத்திரு. பாலமுருகனடிமை சுவாமிகள், இரத்தினகிரி. |
| | | தவத்திரு. கலவை சச்சிதானந்த சுவாமிகள், கலவை. |
| | | மாண்புமிகு. G. விசுவநாதன், Ex. M.P. & முன்னாள் தமிழக அமைச்சர்<br>வேந்தர் - வேலூர் தொழில் நுட்ப பல்கலைக்கழகம் |
| | | சீர்மிகு. C. ஞானசேகரன் M.L.A. |
| | | சீர்மிகு Rtn. PP. தெ. சமரசம் |
| | | திருமிகு. டாக்டர் ப. அருச்சுனன்<br>ஸ்ரீ புற்று மகரிஷி சித்த மருத்துவ சேவை மையம். |
| தலைவர் | : | கம்பர் பித்தன். S.N. குப்புசாமி முதலியார் |
| துணைத் தலைவர் | : | சீர்மிகு. Rtn. PP. V. சோலைநாதன் |
| செயலர் | : | தமிழருவி. கவிஞர். ச. இலக்குமிபதி |
| பொருளாளர் | : | சீர்மிகு. J. அப்பாசாமி |

## வரவேற்புக் குழுவினர்

சீர்மிகு. C. ஞானசேகரன் M.L.A. வரவேற்புக்குழு தலைவர்

" கவிஞர். கவிதை ஞாயிறு. கோ. இருசன்
" கவிஞர். பாரதி பணிச்செல்வர். சு. சுப்பிரமணி
" கவிஞர். பொன். செல்வகுமார்
" R. ஜெயராமன், சத்துவாச்சாரி
" S.M. சுந்தரம், சத்துவாச்சாரி
" Rtn. PHF. PP. V.T. மோகன சுந்தரம்,
சுந்தர் ரேடியோ ஹவுஸ்
" J.A. நிஸார் அலி, வேலூர் சில்க் ஹவுஸ்
" R. சீனிவாசன், குமரன் மருத்துவமனை
" விழவெள்ளி ஆறுமுகம்
" இரா. கிருஷ்ணமூர்த்தி
" கவிஞர். பாலமுரளி
" இரா. ப. ஞானவேல், திருக்குறள் இயக்கம்.
" வி. இராஜேந்திரன், திருக்குறள் இயக்கம்.
" M.N. சந்திரசேகரன், சென்னை.
" திருவள்ளூர். பச்சையப்பன்
" V.L. சச்சிதானந்தம்
" J. நித்தியானந்தம்